உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம :

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



தொகுதி 11 } குரோதன ௵ பங்குனி மீ ௧௨ } பகுதி 9
1926 ௵ மார்ச்சு மீ 14 ௳

## கடவுள் வணக்கம்.

ஐந்துவகை யாகின்ற பூதபே தத்தினா
லாகின்ற வாக்கை நீர்மே
லமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்னநா
னறியாத கால மெல்லாம்
புந்திமகி ழுறவுண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி யென்றி ருந்தேன்
பூராய மாகநின தருள்வந் துணர்த்தவிவை
போனவழி தெரிய வில்லை
எந்தநிலை பேசினு மிணங்கவிலை யல்லா
லிறப்பொடு பிறப்பை யுள்ளே
எண்ணினா னெஞ்சது பகீரெனுந் துயிலுறு
திருவிழிப்பு மிரவு பகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கமிவை யென்கொலோ
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (1)

காதற்றுப் போனமுறி கட்டிவைத்தா லாவதுண்டோ
தீதற்ற காயமுமச் செய்கையே—போதமாய்
நிற்பரல்லா விச்சகத்தி னோரார்க ணோர்ந்திடினுந்
தற்பரமாக் கண்டிருப்பார் தாம். (2)

தத்துவப்பே யோடே தலையடித்துக் கொள்ளாமல்
வைத்த வருண்மோன வள்ளலையே—நித்தமன்பு
பூணக் கருதுநெஞ்சு போற்றக் கரமெழும்புங்
காணத் துடிக்குமிரு கண். (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. பூதபேத மயமாகிய சரீரம் நீர்மேற் குமிழிபோல் நிலையற்றது. இந்த உண்மையை நாம் அறிந்துகொள்ளாதவரையில் நமக்குச் சிற்றின்ப நுகர்ச்சியே தலையெடுக்கும். இறைவன் திருவருளால் உண்மையை புணர்வோமாயின் 'அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவு' போல் அந் நுகர்ச்சி நம்மைவிட்டுச் சொல்லாமலே யகன்றொழியும். பின்னர் வேறெப் போதனைக்கும் நமது மனம் இடந்தராது. மேலும் பிறப்பிறப்பின் கொடுமைகளை நாம் ஒரு சிறிதும் சிந்திப்பதில்லை. சாவதானமாய்ச் சிந் தித்துப் பார்ப்போமானால் நமது மனம் பகீரென்னும்; கண்கள் நித்திரை கொள்ளா; சரீரம் அனலிலிட்ட மெழுகுபோலுருகும். இச்செயல்கள் இந்நூலாசிரியர்பால் நிகழ்ந்தமையின், நைச்சியோபசாரமாய் அவர் 'அச் சாதனமின்றிய என்பால் அவ்வாறு நேர்வதற்கு யாதுகாரணம்; அஃதுன் திருவருளே' என்று இறைவனை நோக்கி இச்செய்யுளிற் கூறுகின்றார்.

ஐந்துவகையாகின்ற பூதமாவன—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகா யம் முதலியன. பேதத்தினால் என்றதனால் தன்மாத்திரைகளாகிய சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்தினையும், அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கினையும், கன்மேந்திரி யங்களாகிய வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னும் ஐந்தினை யும், ஞானேந்திரியங்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்தினையும் கொள்ளல் வேண்டும். இவ்விருபத்துநான்கு தத்துவங்களும் உடலுக்கு இன்றியமையாதனவாதலின் 'ஐந்துவகையாகின்ற பூத பேதத் தினா லாகின்ற வாக்கை' என்றார். இவ்விருபத்துநான்கும் ஆன்ம தத்துவ மாம். ஆன்மதத்துவங்களா லாக்கப்பட்ட ஆக்கை நிலையற்ற தென்பார் 'ஆக்கை நீர்மே லமர்கின்ற குமிழி' என்றார்.

அறியாதகாலம்=பதிநூல்களை விசாரியாத காலம்.

பதிநூல்களை விசாரியாதகாலத்தில் அறுசுவை யடிசில்களை உண்ணுத லும், பஞ்சுபட்டாதி யாடைகளை யணிதலும், வனிதையராதியர் இன்பம் நுகர்தலும் அப்பிரயோசனமென எண்ணாமல் நிலையானவையென்று எண்ணி யுழன்றேனென்பார், 'புந்தி மகிழுற வுண்டுடுத் தின்பமாவதே போந்தநெறி யென்றிருந்தேன்' என்றார்.

அருண்மேவிட்ட காலத்து, அவ்வருள் தலைமையாகவிருந்து யாவை யும் நடத்த அந்த அருள் வியாபகத்தில் வியாப்பியமாகநின்ற எனக்கு மருள் சம்பந்தமான எவையுந் தோன்றாது மறைந்தனவாகலின், 'அருள் வந்துணர்த்த வினைபோனவழி தெரியவில்லை' என்றார்.

பிறக்கின்ற காலத்தில் கருப்பாசயப்பை உறுத்துதலினாலும், அதில் சலம் பூரித்தலினாலும், உதராக்கினி சுடுதலினாலும், பிரசூதவாயு மூரித் துத் தள்ளுதலினாலும், யோனித்துவார நெருக்கத்தினாலும் மலையிறுத்திக்

கொண்டதுபோலவும், கடலின்கீழ் வீழ்த்தி மிதித்தல்போலவும், இருப்புக் கடத்திலடைத்து நெருப்பாற் சுடுதல் போலவும், மலைமேல் நின்றவனைத் தலைகீழாகத் தள்ளுதல் போலவும், ஆலையிலிட்ட கரும்பு நெருக்குண்டல் போலவும் வரும் துன்பங்கள் பலவாயிருத்தலினாலும், இறக்கின்றகாலத்தில் நாவும் இதழும் பற்களும் கறுத்திடவும், நெற்றியும் கண்டமும் வியர்த்திடவும், உடல் அல்லித்தண்டைப்போல் ஜில்லிடவும், முடிசாயவும், முகஞ் சோரவும், விழியிருளடையவும், நெடுமூச்சு வாய்வழிநின்றெழுந்து உடலையலைக்கவும், நவத்துவாரமும் அடைந்து விக்கலுண்டாகித் தேகம் நடுங்கி மூர்ச்சை மேலாடி உயிர் சிதையவும் வருந்துன்பங்கள் பலவாயிருத்தலினாலும், 'இறப்பொடு பிறப்பையுள்ளே எண்ணினால் நெஞ்சது பகீரெனும் துயிலுறு திருவிழியு மிரவுபகலாய்ச், செந்தழலின் மெழுகானது' என்றார்.

பூராயம்=ஆதியந்தம்.
அங்கம்=சரீரம்.
சிரகிரி=சிராமலை—திரிசிரன் ஆட்சிபுரிந்த இடம்.

2. கட்டாகவுள்ள காதற்ற வோலைகள் எடுத்தாளுதற்கு எங்ஙனம் உபயோகப்படாவோ அங்ஙனம் சிரவணஞானம் அடையப்பெறாத சரீரங்களும் பிரயோசனப்படா. ஆதலால் போதனைமயமாய் நிற்பவர் ஜீவன் முத்தர்களாவர்; தற்பரசொரூபமாகக் கண்டிருப்பவர் எல்லாவற்றையும் இறைவனாகப் பார்ப்பவர்கள் என்று இதிற் கூறுகிறார்.

காது=துளை.
முறி=எழுதோலை.
காயம்=தேகம்.
போதமாய்=ஞானவடிவமாய்.
நேரார்=பொருந்தாதார்.

3. அநித்தியமான தத்துவங்களுடன் சம்பந்தித்துப் பிரபஞ்சமுகமாக இருந்து அவதிப்படாமல் அந்தர்முகமாகவிருந்து ஆனந்தாதீதத்தினையனுபவிக்க அஜபா மந்திரத்தினை யுபதேசித்த ஆசாரியரை நினைக்குந்தோறும் தியானிக்கவும், கும்பிடவும், தரிசிக்கவும், மனம், கைகள், கண்கள் மூந்துகின்றன என்று இப்பாடலிற் கூறுகின்றார்.

தலையடித்துக்கொள்ளாமல்=தலைமோதிக்கொள்ளாதபடி.
அருள்வைத்த=கிருபைபாலித்த.
கரம் எழும்பும்=கையெடுக்கும்.
துடிக்கும்=பதைக்கும்.

---

சந்தாதாரர்களுக்கு.—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# ஆனந்தபோதினி

குரோதனஸு பங்குனிமீ ௧௨


## தற்கால மகத்துவம்.

பெரும்பான்மையும் வாசாலமான இடாம்பீக நடையே தற்கால மகத்துவமாக விளங்கிவருகிறது. பலர்க்குச் சுயானுகூலத்துள்ள கண்ணுங் கருத்தும் பரானுகூலத்தில் இல்லை. உதய ஸ்நானம், ஜெபம், காயத்திரி அவுபாசனம், ஓமம், கருமம், தவம், வேதாத்தியயனம், சுசி, ஆசார நியமம், தேவதாபக்தி முதலிய உரிமைப்பாடுகளை வேதியரிற் பலர் துராசாரமெனக் கருதிக் கைநழுவ விட்டுப் பொருளாசைகொண்டு, தம்மை வணங்கத்தக்கவரைத் தாம் வணங்கி யாசித்துத் தமது அருமையான காலத்தை வீணாக்குகின்றனர். அன்னோர் முகத்தில் தோன்றவேண்டிய பிரமதேஜசு மழுக்கமடைந்து வருகின்றது; பலிதமாகவேண்டிய அவர்கள் வாக்கும் பயனில் வாக்காய் முடிகின்றது. நவீன நாகரிகமென்னும் அநுசாரத்திற் றலையிட்ட அவர்கள், நல்லொழுக்கமாகிற பழமையை அநுசரித்துவரும் தங்களினத்தவரையுந் தூற்ற முற்படுகின்றனர்.

க்ஷத்திரியரிற் சிலர் நித்தியஸ்நானம், ஜெபம், நீதி, தருமம், தானம், தெய்வவழிபாடு முதலியவற்றிற் கவனஞ் செலுத்துவதை அறவே மறந்து, திரவியாபேட்சையிற் பெரிதுஞ் சிக்குண்டு, தன்னுயிர்போல மன்னுயிரைக் காக்கவேண்டுமென்கிற சிந்தையின்றி, எமன் உயிரைக் கவர்வதொத்து நிர்த்தாக்ஷண்யமாய்ப் பிறரை வருத்துகின்றனர்; பரஸ்திரீகமனமும் பரிந்து புரிகின்றனர். பெரியோர்களுக்கு வந்தனோபசாரஞ் செய்யப் பிரிய முறுகிறதில்லை. யாகாதி சத்கிருத்தியங்களை நினைப்பதில்லை. கொடுங்கோலாட்சியிற் குதுகலிக்கின்றனர். இதனால் மாத மும்முறை பெய்யவேண்டிய மழைவளம், முப்போகத்துக்குரிய பயிர்வளம், குடிவளம் முதலிய வளங்கள் குறைவுற்று, குடிகளுக்குத் துர்ப்பயம், துர்வியாதி, துர்

மாணம், கொலை, களவு, கள், காமம் அதிகரிக்கின்றன; மகான்கள் தவம், யாகம் செய்வதற் கனுகூலமின்றி, மிருகவுபத்திரவம் மிகுத்துச் சிரமப்படுகின்றனர். மற்ற வருணத்தவரிற் பலரும் தத்தமது கடமைகளிற் பிறழ்ந்திருக்கின்றனர்.

உலகில் பொய், பொல்லாங்கு, பகை, கெடுநினைப்பு, அசத்தியம், பிறர்பொரு ளிச்சித்தல் முதலிய அதன்மங்கள் பெருகுகின்றன. கிழங்கு முதலிய சகல வஸ்துக்களும் சுவையற்றுப் போகின்றன. ஜலம் வெப்பமாய் உப்புத்தன்மை யடைந்துவிடுகின்றது. கறவைகளுக்குப் பால்வளம் வறட்சியாகின்றது. சகலருக்கும் மனோவியாகூலம் மேற்படுகின்றது. மேற்குலத்தோர் இழிவான தொழில் புரிந்து ஜீவிக்கவேண்டியவர்களாகின்றனர். தெய்வநிந்தை ஏற்படுவதுடன் விரதம், நோன்பு, பிதுர்கன்மம் என்பவை யாவும் பொய் என்ற வதந்தி பாவுகின்றது; இவற்றை அனுஷ்டிக்கும் புண்ணியசீலருக்கு ஏளனமே பரிசாகின்றது.

"உண்பதும் உறங்குவதுமே உத்கிருஷ்டம்; தானதருமம், பரோபகாரம், தயை, சாந்தம், பொறுமை, ஜீவகாருண்யம் முதலியவற்றால் வரும் பயன் யாதுமில்லை. இவையாவும் வெளிவேஷக்காரரின் வீண்செயல்கள். அறியாமையால் மடாலயங் கட்டுவது சோம்பற்றன்மை வாய்த்தவர்களுக்கே வாசஸ்தலமாகின்றது ; கோவில், குளம், தீர்த்தம், திருநாள் இவற்றைக் கொண்டாடுவோர் அயோக்கியரே. தாய், தந்தை, அண்ணன், தம்பி, சுற்றம், ஆசான் என்பவர்கள் நம்மைப் போன்றவர்களன்றோ? அவர்களுக்கு நாம் மரியாதை செய்யவேண்டும் என்பது ஞாயந்தானோ? பரஸ்திரீ மக்களுக்கே சகல வுரிமைகளுமுண்டு. அக்கினிசாக்ஷியாய் வேதியர், பந்துக்கள், சால், காகம், அரசாணி முன்னிலையில், பிரமாணரீதியில், மணம் பூண்ட குலஸ்திரீகளுக்கு யாதொரு பாத்தியமுங் கிடையாது" என்று குதர்க்கமிடுவோர் பெருகிவருங்காலமா யிருக்கிறது தற்காலம்.

பலர் தருமசொரூபிகள்போல் நடித்துப் பிறருக்கு இடுக்கண் தேடுவர்; தெய்வ சொத்துக்களை அபகரிப்பதற்குப் பின்வாங்கமாட்டார்கள்; தமது பொருளைப் புதைத்துவைப்பார்கள்.

புருஷரைப் பெண்டுகள் மதியார்கள்; பிள்ளைகள் பெற்றோரை ஆதரிக்கமாட்டார்கள். சீடன் குருவைக் கண்ணியப்படுத்தான். ஒழுக்கத்தில் தாழ்ந்தவர் மேலாவர்; உயர்ந்தவர் தாழ்வுறுவார்கள்.

இவ்வாறு நடப்பது கலியுகதருமம் என்பர் அறிவாளர். "இந்தயுக முடிவிற் பிறக்கும் புருடர் பதினாறு வயதையும், ஸ்திரீகள் பனிரண்டு வயதையும் தங்கள் வாழ்நாளுக் கெல்லையாகப் பெறுவதுடன், பெண்கள் ஏழுவயதிலேயே மகப்பேறடைவார்கள்; உருவத்திலும் குறுகுவார்கள்" என்று புராணங்கள் கூறுகின்றன. அல்லாமலும் "சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாஞ் சொல்லிய வண்ணஞ் செயல்" என்கிறபடி வாசாஞானம் பிரபலிக்கும். வாசா கயிங்கரியப்படி செயலிற் காட்டுவது அருமையாகும் என்றும் புராணங்கள் அறுதியிடுகின்றன. அவற்றின்படியே இத்தீக்கருமங்கள் நடைபெற்று நம்பகம், ஒற்றுமை (ஐக்கியபாவனை) முதலிய நற்குணங்கள் சிறப்படையாதிருக்கின்றன. சிலர், போலித்தனமாக ஒற்றுமை முதலியவற்றைக் காட்டுகின்றனர். அவற்றாற் பயனென்னை ? தமிழரசர்காலத்தில், சோழமண்டலத்தில், கண்டியூரில், சீநக்கமுதலியா ரென்பவ ரொருவ ரிருந்தார். அவர் சோழபூபதியிடம் மந்திரித்தொழில் பார்த்துவந்தார்; பொய்யாமொழிப்புலவரோடு மனப்பூர்த்தியான சிநேகம்பூண்டு அப்புலவர்பெருமானை மிக்க அன்புடன் ஆதரித்து வந்தார். முதலியாருக்கும் புலவருக்குமுள்ள ஒற்றுமையை வியந்துகொண்டாடாதவர் அக்காலத் தொருவருமிலர். ஒருசமயம் புலவர் வெளியூர்போக நேர்ந்தபோது முதலியார் அவருக்குக் கட்டமுது கட்டிக் கொடுத்தனுப்பினார். அப்போது புலவர்,

"அளிகொ ளுந்தொடை யாணா சைக்குமன்
ஒளிகொள் சீநக்க னின்றுவந் திட்டசீர்ப்
புளியஞ் சோறுண்ட புந்தியிற் செந்தமிழ்
தெளியும் போதெலாந் தித்தியா நிற்குமே"

என்றொரு பாடல் பாடினார்.

ஒருநாளிரவு முதலியாரும் புலவரும், முதலியார்வீட்டில், அவருடைய மஞ்சத்திலிருந்து வேடிக்கையாக வார்த்தையாடிக்கொண்டிருந்தபோது புலவர் தூங்கிவிட்டார். முதலியார் அவரை அம்மஞ்சத்தின்மீதே யுறங்கவிட்டு, அவசரமானதோர் அரசன்வேலையாய்த் தாம் வெளியே போய்வர நேர்ந்தது. முதலியார் மனைவி வீட்டுப் பணிகளையெல்லாம் விமரிசைப்படுத்திவிட்டு, சயன அறைக்குட் புகுந்து,அங்குத் தமது கணவரே கட்டிலிற்படுத் துறங்குகிறாரென்று நினைத்து, புலவர் பக்கத்திற் படுத்துக்கொண்டனர். முதலியார்

அரசனது காரியத்தை முடித்துக்கொண்டு திரும்பிவந்தார். மஞ்சத்தில் புலவரும் தமது மனைவியும் படுத்திருப்பதைக்கண்டு அதற்காக மனவருத்தம் கொள்ளாமல், புலவரைக் கொஞ்சம் ஒதுங்க இடங் கேட்டு மத்தியிற் படுத்துக்கொண்டார்.

பொழுது புலர்ந்ததும் மூவரும் படுக்கையைவிட்டு ஒருவர்பின் ஒருவராக எழுந்து வந்தனர். இதைக் கண்டவர்களால் இச்செய்தி ஊர்முழுதும் பரவியது. இது அரசன்வரையிலும் எட்டவே அரசன் புலவரை யழைத்து விசாரித்தனன். புலவர் அரசனைநோக்கி,

"தேரையார் செவ்விளநீர் உண்ணுப் பழிசுமப்பர்
நாரியார் தாமறிவர் நாமவரை நத்தாமை
கோரைவாய்ப் பொன்சொரியுங் கொல்லிமலை நன்னுடா
ஊரைவாய் மூட வலைமூடி தானிலையே"

என்ருர்.

இதனையறிந்த அரசனும் முதலியாரும் புலவருடன் முன்போலவே ஐக்கியபாவங்கொண்டு சிநேகித்திருந்தனர். பின் சிலநாள் கழித்துப் புலவர் வெளியூருக்குப் போயிருந்தபோது முதலியார் மரணம் அடைந்தார். இச்செய்தியைப் புலவரறிந்து உடனே திரும்பிவந்தார். அப்போது முதலியாரின் பிரேதத்தைச் சுடுகாட்டில் சிதையில் வேகவைத்திருந்தனர். வநத புலவர் அவ்விடஞ் சென்று, சிதையில் வேகும் முதலியாரது உடம்பை நோக்கி,

"அன்றுநீ செல்லக் கிடவென்ரு யாயிழையோ
டின்றுநீ வானுலக மேறினுய்—மன்றல்கமழ்
மானுக்கும் வேல்விழியார் மாரனே கண்டியூர்
சீனக்கா செல்லக் கிட"

என்ருர். உடனே அச்சிதையிலிருந்த உடம்பு ஒதுங்கியது. புலவர் அதன்பக்கத்தே படுத்துச் சுவர்க்கமடைந்தார்.

ஒற்றுமை அல்லது ஐக்கியபாவம் இப்படியன்ரே இருக்க வேண்டும். வாசாகயிங்கரியமான ஒற்றுமை வாய்க்குக் கெடுதியேயன்றிப் பயன்றருவதாகாது. ஆதலின், ஒவ்வொருவரும் மேற்கூறிய தீக்குணங்களை அகற்றி உலகிற் கவசியமானவற்றைச் சொல்லளவில்மட்டும் நிறுத்தாமல் செயலிலுங்காட்டி நமது நாட்டை முன்னுக்குக் கொண்டுவர முயலவேண்டும். இறைவன் அருள் புரிவானுக.

ஓம் தத் ஸத்.

## செல்வமும்—வறுமையும்

தடங்கருணைப் பெருங்கடலும், தனிப்பெருஞ்சோதியும், தலைவர் தலைவனுமாய இறைவன், உயிர்களிடத்துள்ள பேரன்பினுல், மக்களை, அவரவர் வினைகளுக்குத் தக்கவாறு, இன்பதுன்பங்களை நுகர்வித்து, கருமபாசங்களைக் கழல்வித்து, இறுதியாக, என்றேனும் ஒருநாள் தன்னடிக்கீழ் கூட்டுவித்தருளுவன் என்பது பெரியோர் துணிபு. "உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும்; நிலைபெறுத்தலும்; நீக்கலும்; நீங்கலா—அலகிலா விளையாட்டுடையார்" ஆய தலைவர் ஆட்டிவைத் தருளுவதற்கேற்ப இவ்வுலகம் இயங்குகின்றது. இத்தகைய இப்புவியில் தன்னையும், தன்னைச் சார்ந்தாரையும் காப்பாற்றிக்கொள்ளவும், ஒல்லும்வகை பிறர்க்கு உதவவும் வேண்டி, அறநெறி நின்று பொருள் ஈட்டுதல் வேண்டும். அதைவிட்டு, "உண்ணான்; ஒளிநிறான்; ஓங்குபுகழ்செய்யான்—; துன்னருங் கேளிர் துயர்களையான்;—கொன்னே-வழங்கான்"—எனத் தூற்றநின்று "நடுவூருள் நச்சுமரம் பழுத்தற்று"—என்பதுபோல, வாழ்ந்து; தானும் அனுபவியாது, பிறரையும் அனுபவிக்கவொட்டாது, ஊணும், உறக்கமும் ஒழித்து, வீணிற் பொருள் காத்து நிற்போர், 'செல்வர்' என அழைக்கப்பெறுதற்கு அருகரல்லர். "கொடுப்பதூஉம்; துய்ப்பதூஉம் இல்லார்க்கு—அடுக்கிய—கோடி உண்டாயினும் இல்"—எனும் பொய்யாமொழிக் கிணங்க, அத்தகையோர் நித்திய தரித்திரரே ஆவர். பொன்னும், பொருளும் தம்மளவில் உயர்வுடையனவல்ல என்பதும், தாம் அளிக்கும் பயனை நோக்குமிடத்தே உயர்வுடையன என்பதும் உய்த்துணரற்பாலன. ஆதலால், ஆண்டவனது அருளால் அளிக்கப்பெற்ற செல்வத்தைக்கொண்டு, தானும் அனுபவித்து, தம்மைச்சார்ந்தாருக்கும் ஆதரவளித்து, ஒல்லும்வகை, இல்லார்பிறர்க்கும் ஈந்து வாழ்தலே செல்வத்தாற் பெறற்பாலதாய சீரியபேறு; அஃதே அறநெறி; அதுவே, உண்மை இன்பமுமாம். இதனாலன்றோ, "ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல்! தாமுடைமை—வைத்திழக்கும் வன்கணவர்"—என வள்ளுவரும் திருவாய்மலர்ந்தருளினர். மற்றும், பிறர்க்கு உதவப்பெறாது, பாம்புகாக்கும் மாணிக்கமேபோல, பெருங்கவலையோடு பேணிச் சேமித்து வைக்கப்பெறும் செல்வம், தன்னைக் காப்பாற்றிவந்தவன் காலத்திற்குப் பின்னர், பிறபல வேற்றூர்களாலும், பலவழிகளிலும் சிதைத்துச் செலவழிக்கப்பெறுதல் கண்கூடே. இதுகண்டன்றோ, "ஈயார் தேட்டைத் தீயார் கொள்வார்"—என ஔவைமூதாட்டியும் அருளிச் சென்றனள். நிற்க,

'செல்வம்' எனப்படுவது, 'பணம் பத்துவகைசெய்யும்' எனும் பழமொழிக்கேற்ப, இவ்வுலகிலுள்ளவரையில் நமக்குப் பலநலங்களையும் கூட்டுவிப்பதாயினும், மறுமையில் நம்மைத் தொடர்ந்துவர வல்லதன்று; அறமொன்றே மறுமையிற் பயனளிக்க வல்லது. ஆதலின், இருமையினும், பெருமை விளைக்கும் அறமொன்றே, செல்வத்தாற் பெறத்தக்க சீரியபேறு.

இப்பெரும்பேற்றினை, இழந்து வாழ்வோர்நிலை, பெரிதும் இரங்கற்பாலதே யாம். "ஒட்டொடு பற்றின்றி உலகைத் துறந்த செல்வ—பட்டினத்தா"ரும்,

"பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்து மண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை இடைநடுவில்
குறிக்கும்இச் செல்வம் சிவன்தந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லு கேன்கச்சி ஏகம்பனே"

என்று இக்கருமிகள்பால், கருணைமிகையால் இரங்குதல் காண்க. மற்றும், இச்செல்வம் என்றும் நிலைத்துநிற்கும் தன்மைத்தன்று; வறுமையும் அத்தகைத்தே. வண்டிச் சக்கரக்காலொப்ப, மாறிமாறிவரும் "தகையது செல்வம். நற்காலம் வந்தவிடத்தே நணுகுதலும், அல்லா விடத்தே அகலுதலும் அதன் இயல்பு. இஃது "கூத்தாட்டவைக் குழாத்தற்றே; பெருஞ்செல்வம்—போக்கும் அது விளிந்தற்று" எனும் குறட்பாவானும், "மருவினிய சுற்றமும்; வான்பொருளும்; நல்ல உருவும்; உயர்குலமும்; எல்லாம் திருமடந்தை ஆம்போதவளோடும் ஆகும்; அவள் பிரிந்து போம்போ தவளோடும் போம்" என்பதாலும், "குடைநிழலிருந்து குஞ்சரமூர்ந்தோர்—நடைமெலிந்தோரூர் நண்ணினும் நண்ணுவர், குன்றத் தனை இருநிதியைப் படைத்தோர்—அன்றைப்பகலே அழியினு மழிவர்; அறத்தொடு பிச்சைகூவி இரப்போர்—அரசரோடிருந் தரசாளினுமாள்வர்" எனவரூஉம் பெரியோர் மொழியாலும் இனிது பெறப்படும். ஆதலின், "நில்லாதவற்றை நிலையென்றுணரும் — புல்லறிவாண்மை"யைப் போக்குதல் வேண்டும். உயர்தரவாழ்க்கை நடாத்தும் செல்வர்களை நோக்கி, உலகமெங்கணும்சென்று பெரும்புகழ் நிறுவிய பெரியாராம் விவேகானந்தசுவாமிகள், "இந்த உலகம் மாயை என்று சிலர் கூறுகின்றனர்; உண்மையில், நீங்கள் தான் மாயைகள். கல்வியும், நாகரிகமும் விருத்தியாகிக்கொண்டுவரும் இந் நாளில்—இன்னும், இந்தப் பணத்தை வைத்துக்கொண்டிருக்கின்றீர்களா! உங்கள், சந்ததியாருக்கு, அவற்றை அளித்துவிடுங்கள். உங்களுடைய இடத்தில், புதிய இந்தியா தோன்றட்டும்; கலப்பையைப் பிடித்துக்கொண்டிருக்கும் குடியானவனிட மிருந்து, செம்படவனிடமிருந்து, சக்கிலியனிடமிருந்து; புதிய இந்தியா உதயமாகட்டும்; சோலைகளிலிருந்து, வனங்களிலிருந்து, மலைகளிலிருந்து புதிய இந்தியா கிளம்பட்டும்" என்றார். (இவை சுவாமிகள் தமது சீடரில் ஒருவருக்கு எழுதிய கடிதத்தினின்றும் எடுக்கப் பெறற்ன) மற்றும்,

பொருட்செல்வம் ஒன்றே, போதியதுணையாகாது; அருட்செல்வத்தையும் கொண்டிருப்போரே, நிரம்பிய 'செல்வர்' எனப்பெறுவர். இருமையிலும், பெருமையடைவதற்கு இன்றியமையாது வேண்டற்பாலது அருள். அருள் உருவாய ஆண்டவனது மக்களாய நாம், நமது ஏழைச் சகோதரர்களிடத்தும் அருளுடைமைபூண்டு ஒழுகினேற்றுன், அனைவர்க்கும் அத்தனும் ஆண்டவனது அறக்கருணைக்கு இலக்காகப்பெறுவோம். அத்தகைய

அருள் நெஞ்சினார்க்கு, யாதொரு தீங்கும் விளைவதில்லை. இக்கூற்றை வலியுறுத்த "அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை; இருள் சேர்ந்த—இன்னா உலகம் புகல்" எனவும்; "மன்னுயிரோம்பி அருளாள்வாற் கில்லென்ப, தன்னுயிர் அஞ்சும் வினை" எனவும், வரூஉம் பொய்யில் புலவரது பொன்மொழிகளே போதிய சான்றுகளாம். அருளோடுகூடி, இரவலர்க்கு அளிக்கும் அறவினையாளர்கள், தமது செல்வங்குன்றப் பெறுகின்றார்களில்லை; அன்னார்தம் வருவாய், ஏழைகளது வாழ்த்துக்களினால், மேன்மேலும் பெருகி வளர்வதோடு, புகழும் செழித்து வளரும். அவ்வருளாளருள், உயர்ந்தோர், தாம் வறுமையுற்றகாலத்தும், 'நீரின்றி வறண்டு கிடக்கும் ஆற்றுமணலை, சிறிது தோண்டிற் சுரந்து பெருகும் ஊற்றுநீர்' போல, தம்பால் வந்தோர் குறைகளைப்போக்கியே அனுப்புவர். உதாரணமாக, குமண சக்கரவர்த்தி, புலவருக்குத் தலையளிக்க ஒருப்பட்ட கதையினை நோக்குக. இதுகாறும், கூறிவந்த யாவும், உயர்தரவாழ்க்கை நடாத்தும் செல்வர்கட்கே சாலப்பொருத்தமுடையனவாம். இனி, இடைத்தரச் செல்வர்கட்கு,(அதாவது, முன்னோரால் சேமித்துவைக்கப்பெற்ற பொருள்பெரிதுமின்றி, தம் முயற்சிகொண்டு சேகரிக்கப்பட்டதும்; தமக்கும், தம்மைச் சார்ந்தார்க்கும் டாம்பிகமற்ற சுகவாழ்க்கைக்குப் போதியவளவுகண்டு, சிறிது எஞ்சுவதுமாகிய செல்வப்பொருளை உடையார்க்கு)ச் சில கூறுவோமாக.

இடைத்தர செல்வர்களே! உங்கள் வாழ்வே சுகவாழ்வு; அமைதி நிலவும் வாழ்வு; அவாவெனும் பேயை அகற்றும் வாழ்வு. அளவுக்கு மிஞ்சிய பெரும்பொருள், சில சமயங்களில், ஆடம்பரச்செலவுகட்குக் காரணமாய் நின்று, வீண்விரயத்திற் குட்படுதலால், எத்தகைய நற்பயனும் விளைவியாததோடு, சிறுகச் சிறுகச் செலவுக்குள்ளாகித் தேய்ந்தழியும்; சிக்கனமாக வாழ, பின்பழக முயலினும், அப்பெருஞ்செல்வர்களை, அடக்கிவிடவல்லது. ஆனால், செலவின் அளவினும் சிறிது பெருகிய வருவாயை உடைய பொருள், அமைதிக்கும், அருளுடைமைக்கும் அன்புக்கும் நிலைக்களனாக நிலவற்பாலது. உயர்தர (டாம்பிக) வாழ்க்கை நடாத்துவோரைக்கண்டு நீங்களும் அவ்வாறு ஆடம்பரவாழ்வு வாழவேண்டும் என்று ஆசைப்பட்டு வருந்துதல் கூடாது. அவர்கள் வாழ்க்கை, வெளிக்கு ஆனந்தமாகத்தோற்றினும், உண்மையில் அமைதியற்றது. எளியவாழ்வே இன்பம் பயப்பது. இதுகண்டே, மேனாட்டில் தலைசிறந்த ஞானிகளான, டால்ஸ்டாய், ரோமென்ரோலண்டு முதலிய அறிஞரும், இந்நாட்டில் காந்தியடிகள் உள்ளிட்ட ஆன்மஞானிகள் பலரும் எளிய வாழ்வையே போற்றுவாராயினர். அவா எனப்படுவது எத்தகையினரையும் அல்லற்படுத்துவது. "ஆசை வர வர ஆய்வரும் துன்பங்கள்—ஆசை விடவிட ஆனந்தமாமே" என்பது திருமூலர் பெருமொழி. "உள்ளதேபோதும்; நானென்றெனக் குளறியே ஒன்றைவிட் டொன்றுபற்றி—பாசக்கடற்குளே வீழாமல் மனதற்ற பரிசுத்த நிலையை அருள்வாய்!" என்று ஈசனை வேண்டினார் தாயுமானார்.

'போதுமென்ற மனமே பொன்செய்யு மருந்து" என்பது மூதுரை. ஆதலின், உள்ளநிலைமையில் திருப்தி அடைந்து, ஆடம்பரமற்ற சுகவாழ்க்கையை மேற்கொண்டு, நுமக்கும், நும்மைச்சார்ந்தோருக்கும் கண்டு மிகுந்த பொருளை "ஐயமிட்டுண்" எனும் ஔவை மொழிப்படி, அருள் நிறைந்த நெஞ்சினராய், பிச்சை இடத்தக்க இரவலர்க்குப் பகிர்ந்து வழங்கி யின்புறுங்கள்.

(தொடரும்) ஆ. வ பதுமநாப பிள்ளை,
"திருமகள் நிலயம்" ஆரியூர், (விழுப்புரம் தாலுகா)

---

## நாலடியார் வசனம்.

(325-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 33-ம் அதிகாரம்—புல்லறிவாண்மை.

(அற்ப அறிவை ஆளுந்தன்மை.)

அறிவுடைப் பெரியோர், கிருபையால் தருமமார்க்கத்தைச் சொல்லும் அன்புடையவர்களின் வாய்ச்சொற்களைப் பயன்தரும் சொற்களாகக் கொள்ளுவார்கள். பாற்சோற்றின் ருசியை அகப்பை அறியாததுபோல, பொருளாகாத சிற்றறிவுடையவன் அச்சொற்களை இகழ்ந்து சொல்லுவான். (1)

தோலைக் கடித்துத் தின்னும் புலையர்களுடைய நாயானது பால் சோற்றின் சுவையைக் கொள்ளுதலை அறியாததுபோல, பொறுமைக் குணமில்லாத பெரியோர் தருமமார்க்கத்தைச் சொல்லும்போது நல்லறிவில்லாதவர்கள் காதுகொடுத்துங் கேட்கமாட்டார்கள். (2)

தமது இனிய வுயிரானது கண்மூடித் திறக்குங்காலத்தில் (உடலைவிட்டுப் பிரிந்து) போகும் வழியை, எல்லாவகைகளாலும் தாம் அறிந்திருந்தும், தினையளவாயினும் நற்காரியத்தைச் செய்யாத வெட்கமற்ற சிற்றறிவுடைய மனிதர்கள் செத்தாலென்ன வாழ்ந்தாலென்ன? (3)

(ஒருவன்) தனது வாழ்நாள் சிலவாயிருத்தலாலும், (தனது) உயிர்க்கு (அது உடம்பைவிட்டுப் போகாதபடி செய்யக்கூடிய) காவல் இல்லாமையாலும், (பார்ப்போர்) பலரும் ஆற்றத்தக்க பழியாகுமாதலாலும் (உலகிலுள்ள) பலபேர்களுள்ளும் கண்டவர்களெல்லோருடனும் (இனிமையாகக்கூடி) மகிழாமல், விலகித் தனியாக இருந்து விரோதம் பாராட்டுதல் என்னகாரணமோ! (4)

ஒருவன் பலர் கூடியிருக்கும் சபையின்முன்பு போய், மற்றொருவனை இழிவாகப்பேசி வைதான். (அவ்வாறு அவன்) வைய, வையப்பட்டவன் யாதொன்றும் பதில் பேசாமல் சும்மா இருப்பானானால், வைதவன் வாழான்; அங்ஙனம் வாழவானானால் (அவன்) அதிசயப்படத்தக்கவனேயாவான். (5)

விருத்தாப்பியமானது மிகுதியாக வராமலிருப்பதற்கு முன்பே தரும காரியங்களைச் செய்யத்தொடங்கி இளமையில் அவ்விஷயத்தில் முயற்சியில்லாதவன், (பின்பு) வேலைக்காரியாலும் தள்ளப்பட்டு 'வெளியிலிருபோ' என்னுங் கடுஞ்சொற்கள் சொல்லப்படுவான். (மிக்க எளியவனாகி வேலைக்காரிகளாலும் இழிவாகப் பேசப்படுவான்.) (6)

அற்பவறிவுடையோர், (தாம் பெற்ற செல்வத்தைக்கொண்டு) தாங்களும் இன்ப மனுபவிக்கமாட்டார்கள்; பெரியோர்களுக்குத் தானஞ் செய்யவுமாட்டார்கள்; (தமது) உயிர்க்குப் பாதுகாப்பாகவுள்ள நல்ல தரும மார்க்கத்தையுஞ் சேரமாட்டார்கள்; தாங்கள் அறிவுகெட்டுச் செல்வத்திலேயே ஒன்றுந் தோன்றாமலிருந்து தங்கள் வாழ்நாளை வீணாகவே ஒழித்துவிடுவார்கள். (7)

இளம்பிராயத்திலேயே (தாம் இறந்தபின்பு) போகும்படியான மறுவுலகத்திற்குத் தமக்கு வேண்டிய (தருமமாகிய) கட்டுச்சோற்றை மிகவும் அழுத்தமாகத் தோளிற்கட்டிய மூட்டையாகக் கொள்ளாதவர்களாய், பொருளைக் கெட்டியாகப் பிடித்துத் தருமத்தைப் பிறகு செய்வோமென்றெண்ணியிருக்கும் அறிவற்ற லோபிகள், (தங்கள் மரணகாலத்தில்) கையாற்காட்டும் பொன் குவியலும் புளித்த விளாங்காயாகும். (மரணகாலத்தில் தருமஞ்செய்யவெண்ணித் தம் மனைவி மக்களைப் பார்த்துத் தம்மிடமுள்ள பொன்னைக் கொண்டுவரும்படி கையைக்குவித்துச் சைகைகாட்ட அக்கருத்தை யறியாமல் அவர்கள் விளங்காயைக் கொணர்ந்து கொடுப்பார்கள் என்பது கருத்து ) (8)

அற்புத்தி யுடையவர்கள், செல்வமில்லாத தரித்திரகாலத்திலும் வியாதிகள் வந்தகாலத்திலும் மறுமைக் குபயோகமாகும்படியான தருமத்தைச் செய்யவேண்டுமென்னும் மனமுள்ளவர்களாயிருந்து, (தரித்திரமும் வியாதியும் இல்லாமல் தருமம்) செய்யக்கூடியகாலத்தில் (சிறிய) கடுகளவாவது மறுமைக்குரிய தானதருமத்தைப்பற்றி நினைக்கவும் மாட்டார்கள். (9)

ஐயோ! அளவுகடந்த ஆசையையுடைய தமது அருமையான உயிருக்கொப்பான உறவினரை எடுத்துக்கொண்டு போவதற்குவேண்டிய முயற்சியைச் செய்கிற எமனைப் பார்த்திருந்தும் (பெறுதற்கருமையான) உடலைப் பெற்றிருந்தும் (சிறிதும்) தருமத்தைக்குறித்து நினையாதவர்களாய் அறிவில்லாதவர்கள் வீணாகத் தமது வாழ்நாளைப் போக்குவார்கள். இது என்ன அதிசயம்! (10)

## 34-ம் அதிகாரம்—பேதைமை.

(யாதொன்றையும் அறியாமை.)

கொலை செய்யும்படியான வலிய பெரிய எமன் (உயிரைக்) கொண்டு போகுஞ்சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்க, (அதைக்குறித்துச் சிறிதும் சிந்தியாமல்) இவ்வுலக வாழ்க்கையாகிய வலையில் மிகவும் களித்திருப்

பவர்களுடைய தன்மையானது, ஆமையைக் கொலைசெய்பவர்கள், (அதை) உலையில் போட்டு நெருப்பைமூட்டி யெரிக்கையில், (அந்த ஆமையானது) தனது (அபாய) நிலைமையை யறியாமல் அந்த உலைநீரில் மூழ்கி விளையாடினாற் போலும். (1)

'குடும்பத்தின்பொருட்டுச் செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் குறைவற (ச்செய்து) முடித்துவிட்டு அதன்பின்பு தருமகாரியங்களைச் செய்வோம்' என்றிருப்பவர்களுடைய தன்மையானது, பெரிய கடலில் நீராடுதற்குச் சென்றவர்கள், (கடலின்) ஓசைமுழுதும் அடங்கினபின்பு நீராடுவோம் என்று காத்திருந்தாற்போலும். (2)

நல்லகுலமும் தவமும் கல்வியும் நற்குடிப்பிறப்பும் முதுமையும் ஆகிய இந்த ஐந்தும் தவறாமல் ஒருவனடைந்திருந்தாலும், பெருமை மிகுந்த குற்றமற்ற பழமையான சிறப்பினையுடைய சுவர்க்கம் முதலிய உலகங்களின் தன்மையை யறியாமலிருத்தல் நெய்யில்லாத வெண்சோற்றுக்குச் சமமாகும். ('நெய்யில்லா வுண்டிபாழ்' என்பதனாலும் நெய்யில்லாச் சோற்றின் தன்மையையறிக.) (3)

கற்களானவை (பிறர்சொல்லும்) சொற்களை மிகவும் அறியமாட்டாவாயினும், அந்தந்தக்காலத்திலே தம்மையடைந்தவர்க்கு நிற்றல் இருத்தல் கிடத்தல் நடத்தல் என்னுங் காரியங்களுக்கு உதவியாயிருத்தலால் (ஒன்றுக்குமுதவாத) கடைப்பட்ட மனிதர்களைவிட அந்தக் கற்களே மிகவும் நல்லவைகளாம். (4)

தாம் அடையும் பயன் ஒன்றுமில்லாவிட்டாலும் (ஏதோ ஒரு பயனை) அடைந்தவன்போலக் கோபங்கொண்டு, தான் கோபிக்கத்தகாதவர்களாகிய மேன்மக்கள் முதலானவர்களிடத்திலும் கோபங்கொண்டு அக்கோபத்தால் கொடுஞ்சொற்களைத் தொடர்ச்சியாகச் சேர்த்துச்சொல்லி, அக்கொடுஞ்சொற்களின் பொருளை யுரைத்து விளக்காவிட்டால் அறிவில்லாதவனுக்கு நல்ல தினவானது நாக்கை வருத்தும் போலும்! (5)

நல்ல தளிருள்ள புன்னைமரங்கள் மலர்ந்திருக்கும் கடற்கரை பொருந்திய பாண்டிய நாடனே! தம்மிடத்து (அடக்கம் முதலான) நல்லொழுக்கம் இல்லாதவர்களின் பின்னால் போய், அவர்களைத் தம்மிடத்தில் வணங்கியிருக்கும்படி செய்வோம் என்பவர்களுடைய இழிவான சிநேகமானது கல்லைக் கிள்ளிக் கையை யிழந்தாற்போலும். (6)

ஒரு பாத்திரத்திற்குள் நெய்யிருந்தால், (அந்த நெய் தமக்கு உண்ணக் கிடைப்பது) இல்லையானாலும், எறும்புகள் அப்பாத்திரத்தை விட்டுப் போகாமல் அதன் வெளிப்பக்கத்தில் சுற்றிக்கொண்டே யிருக்கும். (அதுபோல) யாதொன்றும் கொடாதவர்களானாலும் செல்வமுடையவர்களை (உலகத்தார்) விடாமல் சுற்றிக்கொண்டே யிருப்பார்கள். (7)

(இவ்வுலகத்திற் பலர்) தினந்தோறும் நற்குண நற்செய்கைகளை யடையமாட்டார்கள்; தருமம் செய்யமாட்டார்கள்; வறியோர்களுக்கு

யாதொரு பொருளும் கொடுக்கமாட்டார்கள்; குணஞ் செயல்களிலெல்லாம் இனியவரான தம் மனைவியர்களுடைய தோள்களைச் சேரமாட்டார்கள்; புகழுண்டாக வாழமாட்டார்கள். (இப்படிப்பட்ட அறிவில்லாதவர்கள்) தாங்கள் உயிர்வாழ்ந்திருக்கும் நாள்களை வெறுக்கமாட்டார்களோ! (அவர்களின் வாழ்நாட்கள் வெறுக்கத்தக்கவையாமென்பது கருத்து.) (8)

ஒருவரை 'மற்றொருவர் விரும்பிக்கொண்டாட, (அப்புகழ்ச்சியை நாங்கள்) விரும்பமாட்டோம் என்று நினைத்திருக்கும் ஆராய்ந்தறியும் நல்லறிவில்லாத மூடர்களிடம்கொண்ட சிநேகமானது, முழங்குகின்ற ஓசையுடையதும் பாயும்படியான அலைகளையுடையதுமாகிய கடல்சூழ்ந்த உலகம் முழுவதும் தருவதாயிருந்தாலும் இனிமை தராததேயாம். (9)

(ஒருவன் தான்) கற்ற கல்வியையும் மிகுந்த மேன்மைக்குணத்தையும் உயர்குடிப் பிறப்பையும் அன்னியர் புகழ்ந்து கொண்டாடினால் பெருமையடைவான். (அப்படிக்கின்றி) தானே புகழ்ந்து பேசுவானானால் (பரிகாசஞ்செய்து நகைக்கும்) மைத்துனர் அதிகரித்து, எவ்வித மருந்தாலும் தீராத வெறிகொண்டவனென்று (எல்லோராலும்) இகழப்படுவான். (10)

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

(309-ம் பக்கத் தொடர்ச்சி.)

### ஆரியாசாரம்—பிதிருயக்ஞம்.

முன்பு நித்தியவிதி கூறிய சந்தர்ப்பத்தில் இதைப்பற்றிச் சிறிது கூறப்பட்டது; விரித்து எழுத அவகாசம் நேராமையால் சுருக்கிக் கூறப்பட்டது. ஈண்டு அதனைச் சிறிது விரிவாக எழுதுவாம்:

இந்தப் பிதிர்யாகத்திற்கு மேற்பட்ட கருமம் யாதொன்றும் காணப்படவில்லை. யாகாதிகருமங்களும் இதற்குமேலாகா. யாகாதிகளையும் மற்றுமுள்ள தேவகாரியங்களையும் ஒருவன் செய்யாமல் விட்டுவிடலாம். இந்தக்கர்மத்தை ஒருபோதும் விடக்கூடாது. பிரமசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன் இந்த மூன்று வருணத்தாரும் தத்தம் ஆச்ரமமுறைப்படி செய்தே தீரவேண்டும். இதைவிட்டவனுக்கு எந்தக் கர்மமும் பயன்படாது. அவனைத் தேவ பிதிர் ரிஷிகளாகிய மூவினத்தாரும் வெறுப்பார்கள். இது தன் பிதா மாதா, பிதாமகன் பிதாமகி, பிரபிதாமகன் பிரபிதாமகி இவர்களுடைய திருப்தியைக்குறித்துப் பிதிர்த்தேவர்களை ஆராதிப்பதாம். இதற்குக் கிருதக்ஞை என்று பேர் கூறப்படும். அதென்னவென்றால் "நன்றியறிவு" என்பதாம்.

கேவலாவஸ்தையில் யாதொன்றையும் அறியாமல் மயங்கிக்கிடந்த ஜீவான்மாவைப் புருஷன் இரண்டுமாதம் கருவிருந்து பரிபாகப்படுத்தி ஸ்திரீயின் கர்ப்பாசயத்திலிட்டுக் கருவிகாரணாதிகளை நல்கிச் சகலாவஸ்தையிற் கூட்டி, நன்மைதீமைகளைப் பகுத்தறியும் மெய்யறிவைப் பிரகாசிப்பித்து

அதனால் தேவாராதனை முதலிய சற்கருமங்களை உணர்த்தி, அதுமூலமாகச் சொர்க்காதிபுவனங்களையும், ஜன்மாந்தரத்தில் மீளாக்கதியாகிய மோட்ச கதியையும் அடையும்படி மாதாபிதாக்கள் உபகரித்தார்கள். இதற்கு மேற்பட்ட ஒன்றுமேயில்லையல்லவா? இந்த உபகாரத்தை மறவாமல் அவர்களுக்குப் பிரதி உபகாரம் செய்வதே இதுவாதலால் மிகச் சிறந்தது. இதைச் செய்யாதவனுக்குத் தேவாராதனை தானுதிதர்மங்கள் யாவும் ஒருபயனுங் கொடா. ஆதலால் எப்பாடுபட்டாவது. பிச்சையெடுத்தாவது இதனைச் செய்தே தீரவேண்டும். இதைச் செய்வதனால் நன்றியறிதலாகிய பயன் எப்படிவரும்? பிதிர்க்களுக்கு யாதுபயன்? என்னின், இதுபயனும்.

அதாவது, பிதிர்த்தேவதைகள் சிராத்தபலனைப் பிதிர்க்களிடம் சேர்ப்பித்துவிடுவார்கள். பிதிர்க்கள் அதனால் தாங்களிருக்கும் நரகாதி துன்ப உலகங்களைவிட்டு வேறிடம்சென்று வேறு ஜன்மத்தை அடைவார்கள். நரக துன்பத்தினின்றும் பிதிர்க்களை விடுவிப்பதே பிதிர்யாகத்தின் பயனும். அப்படி விடுபட்டவர்கள் தம் சந்ததியாரை மனமொத்த அன்புடன் ஆசீர்வதித்து வாழ்த்துவார்கள். அதனால் கர்த்தாவின் சந்ததிகெடாமல் விருத்தியாகும். இது மிகுந்த சிரத்தையுடன் செய்யப்படுவதாதலால் அதற்குச் சிரார்த்தமென்று நூல்கள் பெயரிட்டு வழங்கும்.

அத்திரி புத்திரர், தத்தாத்திரேயர்; அவர் புத்திரர் நிமியென்பவர். நிமிக்கு ஸ்ரீமான் பிறந்தான். ஆயிரவருஷகாலஞ் சென்றபின் காலகதியை அடைந்தான். அதனால் நிமிக்குத் தாங்கமுடியாத துக்கம் உண்டாயிற்று. துக்கம் மிகுந்த நிமி தன்புத்திரனுக்கு நன்மைசெய்வதைக்குறித்து வெகு நாள் ஆராய்ந்தார். பிறகு கிருஷ்ணபட்ச சதுர்த்தசியின் இரவில் தூங்காமல் யோசித்துச் சிரார்த்தம் செய்யும்முறையைத் தீர்மானித்துக்கொண்டார். மறுநாள் அமாவாஸை தினத்தில் தம் புத்திரனுக்குப் பிரியமான காய் கனி கிழங்குகளைச் சேகரித்துக்கொண்டு சிறந்த பிராமணர்களை வருவித்துத் தெற்குமுக நுனியாக இலைகளைப்போட்டு, ஏழுபிராமணர்களையும் உட்காரவைத்துப் போஜனமிட்டார். அப்போது உப்பில்லாச் சாமை அரிசிச் சாதமே போடப்பட்டது. அவர்கள் புஜித்தபின் தெற்குநுனியாகப் போடப்பட்ட தர்ப்பையில் தன்புத்திரனுக்குப் பிண்டப்பிரதானம் செய்தார். அவருக்கு மகிழ்ச்சி யுண்டாயிற்று.

பிறகு தாம்செய்த காரியத்தைப்பற்றி வருந்தி இது தர்மமோ அதர்மமோவென்று கவலைப்பட்டார். இதற்குமுன் ரிஷிகளால் செய்யப்படாத இந்தக்காரியத்தை நான் ஏன்செய்தேன்! ரிஷிகள் சாபமிட்டு என்னைவிட்டு நீங்கிவிட்டால் என்னசெய்கிறது? என்று சிந்தித்துத் தமது குலோத்தமராகிய அத்திரிமுனிவரைச் சிந்தித்தார். உடனே அத்திரிமுனிவர் வந்து நிமிக்கு ஆறுதல்சொல்லி நீ செய்தகாரியம் எனக்குச் சம்மதம். ஏனென்றால் ஆதிகாலத்தில் பிரமதேவர் இந்தத் தர்மத்தை நியமித்திருக்கிறார். பிரமாவைத்தவிர வேறு யாவர் சிரார்த்தவிதியை ஏற்படுத்தும் சக்தியுள்ளவர்?

பிரமாவினால் நியமிக்கப்பட்ட தர்மவிதியையே நீ அனுசரித்தாய். துக்கப்படவேண்டாம். பிரமாவினால் ஏற்படுத்தப்பட்ட சிரார்த்தவிதியை உனக்குச் சொல்வேன். நீ அதைத் தெரிந்துகொண்டு செய் என்று சொல்கிறார்.

"ஆதிகாலத்தில் பிரமதேவர் மந்திரத்தோடு ஓரிடத்தை உண்டாக்கினார். அவ்விடத்தில் அக்கினியுடன் கூடியிருக்கும் ஸோமன், பிதிர்க்கள் இவர்களுக்கு ஹவிர்ப்பாகங்களை ஏற்படுத்தினார். சிரார்த்தத்தில் பூமிதேவியையும் வருணனையும் துதிக்கவேண்டும். பிறகு அக்கினியையும் ஸோமனையும் ஆராதிக்கவேண்டும். பிரமதேவரால் படைக்கப்பட்டவர்களும் சூரியகிரணங்களையே புசிப்பவர்களுமான பிதிர்த்தேவதைகளையும் ஆராதிக்கவேண்டும். காலகதியை நடத்துகிறவர்களும், எங்குமுள்ளவர்களும், மஹாத்மாக்களுமான விசுவ தேவர்களே பிரதானமானவர்கள். இவர்கள் ஸஹன் என்பவர்முதல் ஈசுவரன் என்பவர் ஈறாக அறுபத்துநாலு பேர்கள் என்று நூல்கள் கூறுகின்றன.

சிரார்த்தத்தில் கேழ்வரகு முதலிய இழிந்த தானியங்களை உபயோகிக்கப்படாது. பெருங்காயம், உள்ளி, வெண்காயம், முருங்கைக்காய், கத்தரிக்காய், பூசணிக்காய், சுரைக்காய் முதலிய காய்களு மாகா. துப்புதல், இருமுதலும் ஆகா. காஷாயம் உடுத்தினவன், சண்டாளன், சக்கிலியன் முதலியவர்களையும் சேர்க்கலாகாது. என்றால் அவர்கள் சம்பந்தம் எவ்வகையிலும் ஆகாது என்பது. பாபிகளையும் பாபிகளோடு சேர்ந்தவர்களையும் ஒதுக்கவேண்டும். குஷ்டரோகியை விலக்கவேண்டும். அமாவாசையில் சிரார்த்தம் செய்யவேண்டும்" என்று கூறி அத்திரிமுனிவர் பிரமலோகம் போய்விட்டார். இப்படித்தான் சிரார்த்தகிரியை தொடங்கப்பட்டது.

அதன்பிறகு எல்லா ரிஷிகளும் விதிப்படி சிரார்த்தம் செய்யத் தொடங்கினார்கள். சிரார்த்தம் செய்தபின் தர்ப்பணமும் செய்தார்கள். நாலுவருணத்தாரும் செய்தார்கள். இப்படிச் செய்யப்பட்ட சிரார்த்தத்தில் புஜித்த தேவர்களும் பிதிர்க்களும் புஜித்த உணவை ஜீரணிப்பித்துக்கொள்ளச் சக்தியற்றுப் போயினர். சந்திரனிடம்போய் "ஸோமனே! நாங்கள் சிரார்த்த போஜனத்தினால் வருந்துகிறோம். எங்களுக்கு நன்மையைச் சொல்" என்றார்கள். ஸோமன் 'நீங்கள் பிரமாவினிடம் போய்க் கேளுங்கள். பரிகாரம் அவர் கூறுவார்" என்றான். அப்படியே தேவர்களும் பிதிர்க்களும் மேருமலைச்சிகரத்தில் வீற்றிருக்கும் பிரமதேவரைக்கண்டு தம் குறைகளை கூறினார்கள். அதுகேட்ட பிரமா "என்பக்கத்தி லிருக்கும் அக்கினி உங்களுக்குப் பரிகாரம் செய்வான்" என்றார். அக்கினிதேவனும் அவர்களை நோக்கிச் "சிரார்த்தகாலத்தில் நாம் சேர்ந்தே புஜிப்போம்; என்னுடன் கூடியிருப்பதினால் உங்களுக்கு அஜீர்ணம் உண்டாகாது"என்றான். பிரமதேவர், புலஸ்தியர், வசிஷ்டர், புலகர், அங்கிரஸ், கிரது, காசியபர் என்னப்பட்ட மஹாயோகேசுவரர்களாகிய இவ்வேழுபேருமே பிதிர்த்தேவதைகள் என்னப்படுவார்கள். சிரார்த்தம்செய்து ஸபிண்டீகரணம் செய்வதனால் இறந்த

வர்கள் பிரேதத்தன்மையினின்றும் விடுபடுகிறார்கள். முதலில் பிதாவுக்கும், இரண்டாவது பிதாமகருக்கும், மூன்றாவது பிரபிதாமகருக்கும் பிண்டப்பிரதானம் செய்யவேண்டும். "ஸோமாய பிதிருமதே" என்று கூறிப் பிதிர்க்களுக்கு அதிகாரியான ஸோமனுக்கு என்றும் கூறவேண்டும். தன்னினத்தாருக்கும், தன் வம்சப்பிதிருக்கும் தர்ப்பணம் செய்யவேண்டும். கிருஷ்ணபட்ச முடிவாகிய அமாவாசையிலேயே சிரார்த்தம் செய்ய வேண்டும்.

எல்லா ரிஷிகளும் அமாவாசையில் சிரார்த்தம்செய்து வந்தமையால் நிமிந்திரணம் புசிக்கப் பிராமணர்கள் அகப்படுவது அருமை யாயிற்று. ஒரு அமாவாசையில் நிமிந்திரணம் புசித்தவர்களே மறு அமாவாசையிலும் புசிப்பதுகூடாது என்ற விதியினாலும் பிராமணர்கள் கிடைப்பதில்லை. அநேக ரிஷிகள் உபவாசமிருப்பதும் காரணமாம். பிறகு ரிஷிகள் எல்லாரும் பிரம்மதேவரை அடைந்து இந்தக் கஷ்டத்தை நிவர்த்தியாக்கும்படி வேண்டினார்கள். அவர் "நீங்கள் எல்லாரும் ஒரே திதியில் சிரார்த்தம் செய்வதால் இந்தக்கஷ்டம் நேர்ந்தது. இன்றுமுதல் அப்படிச் செய்வதை விட்டு இறந்தவருக்கு அவரவர் இறந்ததிதியில் சிரார்த்தம் செய்வதை விதியாகக்கொள்ளுங்கள். அமாவாசைதினத்தில் பிதிர்க்களுக்குத் தவறாமல் திலதர்ப்பணஞ் செய்யுங்கள்" என்று விதி ஏற்படுத்தி அவர்களை அனுப்பி விட்டார். ரிஷிகள் மனமகிழ்ச்சியுடன் அப்படியே செய்யத் தொடங்கினார்கள். அதுமுதல் நாலுவருணத்தாரும் தத்தம் பிதிருக்கள் இறந்த தினத்திலேயே சிரார்த்தம் செய்துவருகிறார்களென்று ஸ்ரீ மஹாபாரதம் கூறுகின்றது. அநேக ஸ்மிருதிகளும் கூறுகின்றன. பிதிர்யாகமாகிய இந்தச் சிரார்த்தகிரியையைச் செய்யாமல் விட்டவனைத் தேவர்களும் பிதிர்க்களும் சபிப்பார்கள். அதனால் அவன் இகபரமிரண்டிலும் துன்பத்தையே அனுபவிப்பான். சன்மார்க்கசீலர்கள் இதைவிடாமல் செய்யவேண்டும்.

(தொடரும்) சிவானந்த சாகர யோகீஸ்வரர்.

---

## காலமும் அதன் கோலமும்.

காலத்தின் கூத்தே கூத்து. காலத்தின் கோலமே கோலம். சக்கரம் சுழலுவதுபோல் காலமும் மாறி மாறி வருகிறது. ஒருகால அநாகரீகம் மற்றொருகால நாகரீகமாகிறது. தற்கால அநாகரீகம் முற்கால நாகரீகம். நாகரீகதேசம் அநாகரீகநாடாகிறது. அநாகரீகதேசம் நாகரீகநாடாகிறது. உதாரணமாக எல்லோராலும் போற்றப்பட்டு உலகிற் கிரண்டு கண்கள் போலிருந்த கிரீக், இத்தாலியா தேசங்கள், இக்காலத்து, சண்டை சச்சரவுகளுக் கிருப்பிடங்களாய் எல்லாராலும் எள்ளப்படுகின்றன. நாகரீகமில்லாதவர்கள் வசித்த அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய தேசங்கள் இப்பொழுது லக்ஷ்மியும் சரஸ்வதியும் உறையுமிடங்களா யிருக்கின்றன. என்னே காலத்தின் மாறுபாடு!

நாம் பிறந்த பூமியாகிய இப்பாரதநாட்டில் இக்காலத்தின் கோலத்தை ஆராய்வோம்:கைத்தொழில் கல்விகேள்வி இவைகளிற்சிறந்ததாய்க் குபேர நாடெனப் பெயர்பெற்ற நம் இந்தியாதேசம் பல இடர்ப்பாடுகளுக்குள் அகப்பட்டிருக்கிறது. கல்விக்கும் செல்வத்திற்கும் பிறப்பிடமாயிருந்த பாரதநாடு இப்பொழுது கல்விக்கும் செல்வத்திற்கு மிரக்கும் பூமியாயது. கைத்தொழிலில் முதன்மைபெற்று உலகத்திற்கே திலகம்போன்று இத்தாலிக்குத் துணிமணிகள் அனுப்பிய இந்தியாதேசம் இப்பொழுது உடுத்திக்கொள்ளும் உடைக்கு அன்னியர் கைபார்த்து நிற்கின்றது. என்னே காலத்தின்கோலம்! இந்தியாவின் தற்காலநிலைமையும், முற்காலநிலைமையும், கல்வி, செல்வம், கைத்தொழில், ஒழுக்கம் முதலிய துறைகளில் ஊன்றிப் பார்ப்போமாயின் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்.

'இல்லானை எல்லாரும் எள்ளுவர் செல்வரை, எல்லாருஞ் செய்வர் சிறப்பு' ஆதலால் 'இந்தியாவின் செல்வமே முதலாவது நாம் கவனிக்கத்தக்கது. நீர் நில வளப்பங்கள் நிறைந்து, குன்றின்மேலேற்றிய விளக்குப்போல் பிரகாசித்த இந்தியாவின் தற்காலநிலைமை பரிதபிக்கத்தக்கது. கோகினூர் வயிரமும், மயில் சிம்மாசனமுமிருந்த இந்தியா இப்பொழுது அன்னியதேசத்தவரால் அவமதிக்கக்கூடியதா யிருக்கிறது. மேலும் தேசத்தின் வறுமையினால் சுதேசிகள் கைத்தொழில், இயந்திரத்தொழில் முதலியன இயற்றத் திறனற்றவர்களாயினர். இதரநாட்டார் நூல் யந்திரம், அரிசி யந்திரம் முதலிய யந்திரங்களை ஏற்படுத்தி, அவற்றின்மூலம் இங்குள்ள பணத்தைத் தங்கள் நாட்டுக்குக் கொண்டுபோகின்றனர். அயல்நாட்டுக் கனவான்கள் பலர்வந்து இங்கு இருப்புப்பாதை முதலியன அமைத்து நமக்குச் சௌகரியம் உண்டுபண்ணித் தங்களுக்கும் பணச்சௌகரியம் செய்துகொள்கின்றனர். இவ்வாறு நம் தேசத்தின் செல்வம், மேன்மேலும் வெளிச் செல்கின்றதேயொழிய இதற்கு வரவொன்றையும் காணோம். ஆதிகாலத்திலோ இந்தியா வியாபாரத்தில் மேன்மைபெற்றுக் கடல் கடந்து யவனர், உரோமர்களுடன் வியாபாரஞ்செய்து அவர்கள் பணத்தை ஏராளமாக வாரிவந்தது.

இந்தியாவின் செல்வவளம் குறைந்ததற்குக் காரணம் நாம் கைத்தொழிலிலும், வியாபாரத்திலும் கவனம் செலுத்தாதிருப்பதே. சுமார் 400 ஆண்டுகளுக்கு முன்புகூட இந்தியாவிலிருந்து டெக்காமஸ்லின் முதலிய விலைமதித்தற்கரிய துணிகள், முத்துக்கள், தந்தங்கள், ஆகியவை இத்தாலி, கிரீக் முதலிய தேசங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு அங்கிருந்து அவைகளுக்குப் பதிலாக வெள்ளி, தங்கம் முதலியன இறக்குமதி செய்யப்பட்டு இவ்விந்தியநாடு செழிப்புற்றிருந்தது. தற்காலத்திலோ உடுக்கும் உடைக்கும் அன்னியர் கைபார்த்து நிற்கின்றது. நாம் இப்பொழுது கைத்தொழிலை அறவே கைவிட்டோம்.

இவ்வாறு கைத்தொழில் முதலியன க்ஷீணதிசை அடைவதற்குக் காரணம் நாம் கல்வியில் கவனம் செலுத்தாதிருப்பதேயன்றி வேறல்ல.

முற்காலத்தில் கல்விக்களஞ்சியமாகிய நம்நாட்டில் யவனர், அராபியர், எகிப்தியர் முதலியோர் இலக்கியம், கணக்கு முதலியன கற்றுப்போயினர். தற்காலத்தில் நாம் கற்கும் கல்வி ஒன்றிற்கும் உபயோகமாகாதது. நாம் கற்கும் கல்வி தாய்ப்பாஷையுமல்ல, தேசிய பாஷையுமல்ல; நெல்லிருக்கப் பதரைக் கற்கிறோம். துரைத்தனத்தாரிடத்தில் வேலைக்கமர்ந்து அளவற்ற பொருள் திரட்டலாமென்னு மெண்ணத்தோடு அரசாங்கக் கல்வி கற்கிறோம். வீட்டிலிருக்கும் பொருளைக்கொண்டோ அல்லது கடன்பட்டோ B A, M A, முதலிய உயர்தரப்பட்டங்கள் பெற்று நாம் கனவுகண்ட அரசாங்கவேலையும் கிடைப்பதின்றிப் பிழைப்பதற்கு வீட்டில்பூஸ்திதியுமின்றி, 'வாய்த் தவிடும்போய் அடுப்பு நெருப்பு மிழந்தவள்' போல் திண்டாடுகிறோம். கைத்தொழில் ஏதாவதுசெய்து வயிறு வளர்க்கலா மெனிலோ, நாம் கற்கும் கல்வியால், சேக்ஷ்பியர், மில்டன் முதலியோ ரியற்றிய காவியங்கள் நமக்குத் தெரியுமேயன்றி, கைத்தொழில் கற்பிக்கப்படாததால் அத்தொழிலும் செய்யத் தெரியாது. இதனால் நாம் குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசினவர்களாகிறோம்.

நம் நாட்டின் கல்வியும் கைத்தொழிலு மிவ்வாறிருக்க, நம் நாட்டின் விவசாயத்தைப்பற்றிச் சிறிது கவனிப்போம்: முற்காலத்தில் பயிர்த் தொழிலாளர் தங்கள் தொழிலை மிகவும் கௌரவமாய் மதித்து நன்றாய்ப் பாடுபட்டு வந்தனர். அக்காலத்து வேந்தர்களும், "சீரைத்தேடின் ஏரைத் தேடு" என்ற பழமொழிக்கிணங்க அவர்களை மிக அன்போடும், ஆதரவோடும் நடத்திவந்தனர். அத்தகைய உழவுத்தொழில் இப்பொழுது தாழ்மையாகக் கருதப்படுகின்றது. 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந், தொழுதுண்டு பின்செல்பவர்' என்ற பொய்யாமொழிப்புலவர் வாக்கும் இக்காலத்துப் பொய்த்துப்போயிற்று. வேளாண்மை கேவலமான ஓர் தொழில் என்னும் எண்ணம் ஒவ்வொருவரிடத்தும் நாளுக்கு நாள் பலமாக வேரூன்றி வருகிறது. சம்சாரிகள் வயல்களைத் தாங்களே நேரில் போய்ப் பார்ப்பது கேவலமென்று நினைத்தோ அல்லது சோம்பலினாலோ தங்கள் நிலங்களைக் கட்டுக் குத்தகைக்கு அடைத்தோ, அல்லது தாங்கள் போகாமல் வேலையாட்களை அனுப்பியோ அவர்கள்மூலம் பயிர் செய்கிறார்கள். கூலியாட்கள் நிலங்களை நன்றாய் உழாமலும், அவற்றிற்கு உரம் வைக்காமலும், புதியவிவசாயமுறைகளைக் கைக்கொள்ளாமலும் பயிரிட்டுத் தங்கள் சம்பளத்தில் மாத்திரம் கண்ணாய்க் கணக்குவிடாமல் அதைக்கொள்கிறார்கள். நிலம் காலாகாலத்தில் உரம் வைக்கப்படாததால் நிலத்தின் விளைபொருளும் கம்மியாகிச் சீக்கிரத்தில் நன்செய்யும் தரிசாகிறது. இங்ஙனம் உழவர் தரிசை, நன்செய்யாக்குவதைவிட்டு நன்செயைத் தரிசாக்குகின்றனர். வேளாண்மையே நாட்டின் செழிப்புக்குக் காரணம் என்பதை மறந்த இவர்கள்தம் மதி என்னே! "மேழிச் செல்வம் கோழை படாது" என்பதை இவர்கள் அறியாதது என்னே! அரசாங்கத்தார், நாடு செழிப்புற விவசாயம் முக்கியமென்பதைக் குடிகளுக்குக் காட்டும்

பொருட்டு ஆங்காங்கே (Agricultural Farms) விவசாயப்பண்ணைகள் ஏற்படுத்திப் புதுமாதிரி உழுது பயிர்செய்யும் முறையைக் கற்பிக்கின்றனர். நம் நாட்டார் இவைகளைக் கவனித்து அந்தப்படி பயிர் செய்கின்றார்களில்லை யாதலால் நம் அரசாங்கத்தார் முயற்சியெல்லாம் விழலுக்கிறைத்த நீராகின்றது. இனியாவது நம்மவர் வேளாண்மையைக் கவனித்த லவசியம்.

மேற்கூறியவைகளன்றி நம் நாட்டின் ஒழுக்கமும் சீர்கெட்டு இருக்கிறது. "ஒழுக்கம் விழுப்பம் தரலால் ஒழுக்கம், உயிரினு மோம்பப்படும்" என்ற மூதுரையை நம்மவர் மறந்தனர் போலும். இந்தியர்கள் செங்கோல் செலுத்தியகாலத்தில் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு வருணத்தாரும் தங்கள் ஜாதிமுறை வழுவாது, பிராமணர் வேதமோதியும், க்ஷத்திரியர் நாட்டைப் பரிபாலனஞ்செய்தும், வைசியர் சூத்திரர் முறையே வாணிபமும் வேளாண்மையும் செய்தும் வந்தனர். இக்காலத்தோ எல்லாம் தலைகீழாக நடக்கின்றன. அந்தணர், "மறப்பினு மோத்துக்கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக்கெடும்" என்ற வள்ளுவர் வாக்கை மறந்து தங்கள் பிறப்பொழுக்கத்தைக் கைவிட்டுக் கள் முதலியன குடிக்கின்றனர். "அந்தணரென்போர் அறவோர், மற்றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுகலான்" என்னும் குறள் இக்காலத்திய பிராமணர்களுக்குப் பொருந்தாது. அந்தணர் வேதமோதுவதையும் மறந்தனர். ஈகையை அறவே அகற்றினர். பொய் ஏமாற்றம் தந்திரம் முதலியவைகளுக் கிருப்பிடமாகின்றனர். அநாசாரம் ஆசாரமாயது; ஆசாரம் அநாசாரமாயது.

இனி, நம் நாட்டினரின் தெய்வபக்தியைப்பற்றியும் ஆராய்வாம்: "ஆலயந்தொழுவது சாலவும் நன்று" என்ற ஔவையார் வாக்கை இக்காலத்தவர் அவமதிக்கின்றனர்; கேவலமாக நினைக்கின்றனர். நம்மால் கோவில்கட்டச் சக்தியில்லையாயினும் நம் முன்னோர் கட்டிவைத்த கோவிலைக்கூடப் பாதுகாக்க நமக்குச் சிரத்தை இல்லை. "கோவிலில் போய்த்தான் கடவுளைக் கண்டுபிடிக்க வேண்டுமோ" என்று சிலர் விதண்டாவாதம் பேசுகின்றனர். இம்மட்டோடு நில்லாமல் கோவில் குளம் செல்வோரையும் பரிகாசம் செய்கின்றனர். நாம் பிரதிதினமும் கோவிலுக்குச் செல்லாவிட்டாலும், திங்களும் வெள்ளியுமாவது சென்று நம் குறைகளையும் நாம் தெரியாமற்செய்த தப்பிதங்களையும் கடவுள்பால் முறையிட்டு அவர் நமக்கு நற்புத்தி புகட்டுமாறு அவரைத் தொழுவோமாயின், நாம் முன்செய்த தப்பிதங்களினின்றும் நீங்கி நம்மால் இயன்ற அறங்களைச்செய்து நம்மைப் பேரின்பவீட்டிற்குப் பாத்திரராக்கிக்கொள்வோம்.

இனி நங்காலத்தவர் ஊணையும், உடையையும்பற்றிய விஷயமும் கவனிக்கத்தக்கதே. முற்காலத்துத் தென்னிந்தியமக்கள் காலையில் பழையது உண்டு புலஞ்சென்று வெயிலில் நின்று வேலைசெய்து மாலை திரும்புவர். தற்காலத்தவர்களோ பங்குனி, சித்திரைமாதங்களாயினும் படுக்கை

விட்டெழுமுன்னர் காப்பிப்பானம் பருகுகின்றனர்; பின்னர்க் காலைச் சிற்றுண்டி எட்டுமணிக்குக் காப்பியுடன் உட்கொள்கின்றனர். காலைமுதல் மாலைவரை சுமார் 5, 6 தடவைக்குக் குறையாமல் ஆகாரம் சாப்பிடுகின்றனர். இதனால் நோயிடைப்பட்டு வருந்துகின்றனர். "ஒருபொழு துண்பான் யோகியே, இருபொழு துண்பான் போகியே, முப்பொழு துண்பான் ரோகியே" என்றனர் தேரையர். மூன்றுவேளை ஆகாரம் சாப்பிடுகிறவர்களையே ரோகிகள் என்று தேரையர் சொல்லியிருக்க, ஆரோக்யப்பசி, நோய்ப்பசி என்று பசியைப் பகுத்துணராமல் ஐந்தாறுவேளை சாப்பிடுமிவர்கள் பிணிவாய்ப்பட்டுத் துன்புறுவார்களென்பதில் சந்தேகமேயில்லை. "மருந்தெனவேண்டாவாம் யாக்கைக் கருந்திய தற்றது போற்றியுணின்" என்னும் செய்யுள் இக்காலத்தில் சிறிதேனும், நம்மவரால் கவனிக்கப்படவில்லை. நம்மவர் அணியும் உடையோ நாட்டிற் கேற்றதல்ல. மேல்நாட்டார் தங்கள் குளிர்தேசத்திற் கேற்றவாறு தங்கள் சரீரத்தை உச்சிமுதல் உள்ளங்கால்வரை தொப்பி, கைச்சட்டை, கால்சட்டை முதலியன அணிந்து மூடிக்கொள்கின்றனர். நம்நாட்டிற்கு அவ்வாறணிவது அவசியமில்லை. ஆயினும் நாமும் மேல்நாட்டாரைப்போல அவற்றை யணிகின்றோம். இது நம்தேசத்திற்கு ஒவ்வாததாயிருந்தும் அவர்கள் அணிவதைப்பார்த்து நாமுமணிகின்றோம். இஃது என்ன நாகரீகம்!

இவ்வாறாக நாம், நம் நடை, உடை, பாவனை முதலியவற்றால் மிக க்ஷீணதசை யடைகிறோம். ஒல்காப்புகழும் பல்கும் பெருமையுமுள்ள விவசாயத்தைக் கைவிட்டோம். "கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்ற வள்ளுவர் வாக்கை மறந்தோம்; குலமகளைவிட்டு விலைமகளைக் கைக்கொள்வதுபோல் நம் குழந்தைகளுக்குத் தாய்மொழி கற்பித்தலைவிடுத்து வேறுதேச பாஷை கற்பிக்கிறோம். உலகோர் வியப்புற்ற நம் கைத்தொழிலைக் கைவிட்டோம். நம் டெக்காமஸ்லினெங்கே? சிவாஜி முதலியோர் போர்த்திறமை எங்கே? நம் கப்பற்படையெங்கே? யாவும் தூர்க்காலத்திற் கிரையாயின. தானம், தவம், தர்மம், செல்வம் பெருகி உலகத்திற்குத் திலகமாய நம் இந்தியாதேசம் இப்பொழுது உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, கேட்போர் ஏளனம் செய்யும் நிலைமையி லிருக்கிறது. இனியாவது நாம் கைத்தொழில் கல்விகற்று, வேளாண்மையைக் கைக்கொண்டு, உடுக்க உடையும் உண்ண உணவும் தேடிக்கொள்வோமாக. எல்லாம்வல்ல இறைவன் அவ்வாறே அருள் செய்வானாக.

ச. சிவக்கொழுந்து, சிவகாசி.

---

## ஓர் சந்தேகம்.

ஸ்ரீ சீதை, இராவணனுக்கும் மண்டோதரிக்கும் பிள்ளை என்று அநேகர் வற்புறுத்துகிறார்கள். தவிரவும், இது சுப்பிரமண்ய பராக்கிரமத்திலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆதலால் எப்படி? எந்தஜென்மத்தில் அச்

பிறந்தான்? தவிர படைச்சால் என்ற பெயர் எப்படி வாய்த்தது. அதன் சரியான அர்த்தமென்ன? தயவுசெய்து இவ்வினாக்களுக்கு விடை தரும்படி இவற்றிற்கு விடையனுப்பும் புண்யர்கள்பால் நமஸ்காரம் செய்து கேட்டுக்கொள்ளுகிறேன்.

நா. வீரப்பிள்ளை, பிரைவேட் 'ஸ்கூல்மாஸ்டர்' குவாலாலம்பூர்.

குறிப்பு:—சீதாபிராட்டி பூர்வஜென்மத்தில் வேதம் ஓதிக்கொண்டிருந்த குசத்துவரிடம் தோன்றி வேதவதி என்னும் பெயருடன் வளர்ந்து கொண்டிருந்தனள். குசத்துவசர் இம்மாதரசியை விஷ்ணுமூர்த்திக்கே மனைவியாக அளிக்கவேண்டுமென் றிருந்தனர். தம்பன் என்னும் அரக்கன் தனக்கு இக்கன்னிகை கிடைக்காமையால் குசத்துவசரைக் கொன்று சென்றான். தந்தை யிறந்துபோகவே வேதவதி விஷ்ணுமூர்த்தியைக் குறித்துத் தவம் புரியும்போது, திக்குவிசயத்திற்குவந்த இராவணன் இவளை வலிதிற்பிடிக்க, இவ்வேதவதி "நீ தீண்டிய உடலை நான் வைத்திரேன். நானே உன்குலத்தையும் உன் அரசையும் அழிக்கப்போகிறேன்" என்று தீக்குளித்தனள். பிறகு இவள் இலங்கையில் ஒரு தாமரைப்பொய்கையில் தாமரையிற் பிறந்து, சிவபூசையினிமித்தம் பூக்கொய்யவந்த இராவணன் கண் காண இருந்தனள். இராவணன் இக்குழந்தையை எடுத்துக்கொண்டு போய் மண்டோதரியிடம் கொடுத்து மிக்க அன்பாய் வளர்த்துவர அங்கிருந்த நிமித்திகர் 'இக்குழந்தை இங்கிருந்தால் இலங்கை யழியு' மென்றனர். உடனே இராவணன் அக்குழந்தையை யொரு பெட்டியிலிட்டுக் கடலில் விட்டனன். அது அலையில் மிதந்துவந்து வெள்ளத்தில் மிதிலை நகரிற் புதைந்தது. அத்தருணத்தில் மிதிலை வேந்தனாகிய ஜனகன் யாகஞ் செய்ய உழுத கலப்பையின் நுதிமுனையில் பெட்டிதோன்றத் திறந்து பார்த்து, அதில் இவ்வழகிய குழந்தை யிருக்கக்கண்டு, இவளை அன்புடன் எடுத்து வளர்த்து வந்தனன் என்று கூர்மபுராணம் கூறுகின்றது. ப-ர்.

---

## ஊழ் வலிதா? முயற்சி வலிதா?

ஊழ்:—அதாவது நாம் முற்பிறப்பிற் செய்த நல்வினை, தீவினையாகிய இருவினைகளின் பலனையுங் குறிக்கும் ஓர் பொதுச்சொல்லாம். இதனைப் பெரும்பான்மையோர் வழக்கில் அதிர்ஷ்டம், அல்லது விதி என்றே வழங்குகின்றனர். ஆதலின் யாமும் இச்சொற்களையே உபயோகித்தல் நலம். அதிர்ஷ்டமானது, அதாவது ஒருவர் ஒரு பிறப்பின்கண் எந்த நற்செயல் தீச்செயல் புரிகின்றாரோ, அவ்வினைகளின் பலனானது மறுபிறப்பிலும் அவற்றை நிகழ்த்தியோரையே அடையும். அதினாற்றான் ஒருவர்க்கு இந்நிலவுலகின்கண் எத்தகைய நல்வினை தீவினைகளின் பயன் நேரினும் 'விதியின் பயன்' 'விதியின் பயன்' எனவே பலர் செப்புகின்றனர். இங்ஙனம் எவ்வினை நிகழினும் விதியின்பயன் விதியின் பயன் எனவே உரைக்கின்றனராதலின், வினையின் பயனாய விதியினை வெல்லும்வழி ஏதேனும்

உளதா என யோசிப்பாம். அவ்விதியினை வெல்ல முடியுமா? முடியாதா? எனும் எண்ணங்கள் உலகினர் பலரிடத்தும் பற்பலவாறு பதிந்துள்ளன. சிலர் வெல்லமுடியுமென்றும், சிலர் முடியாதென்றும், சிலர் சந்தேகமாகவும் நினைத்துள்ளார்கள். மக்கள் எண்ணங்கள் மாறுபட்டவைகளாயிருக்க, புலவர் எண்ணங்களோ பலவாறு யிருக்கின்றன. எறக்குறைய நம்பெரியார் பெரும்பாலரும் சிற்சிலவிடங்களில் விதி வெலற் கரிதென்றே கூறியுள்ளார். அவருள்,

முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவரு திருவொடு பொலிவ ராயினும்
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லும் நீர்மையார்.

என, ஓர் பெரியார் கூறியுள்ளார்.

இங்ஙனமே பற்பலவிடத்தும் பற்பலர் பகர்ந்துள்ளார்கள். தெய்வப் புலமைவாய்ந்து, மானிட உடலந் தாங்கிவந்த பொய்யாமொழியாளரும் தமது திருக்குறளில்,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்"

என விதியின் பயனையே வற்புறுத்திக் கூறியுள்ளார். நாலடியாரில் வரும்,

"பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு"

என்னும் செய்யுளின் கருத்தும் ஒரு பெரிய பசுக்கூட்டத்தின் நடுவில் ஒரு கன்றை விடுப்பின், எங்ஙனம் அது தன் தாயையே நாடிச்சேர்ந்து பால் பருகுகின்றதோ அங்ஙனமே பல மக்கள் குழுமிய இவ்வுலகின்கண் அவரவர் செய்த வினையானது அவரவரையே நாடி யடைகின்றது என்பதை விளக்குகின்றது. அதனால் அனைவரும் அதிர்ஷ்டத்தின் வலிமையையே வற்புறுத்திக் கூறுகின்றனர். ஆயினும் சிற்சில விடங்களில், விதியின் வலியை நம் முயற்சியின் வலியால் சிறிதளவு வெல்லலாம் என்பதற்கு இடம் தரும்படியும் சிலர் கூறியிருக்கின்றனர். 'மதியால் விதியை வெல்லலாம்'' என்னும் மூதுரை ஒன்றுண்டு. அதற்கு அத்தாக்ஷியாகப் பதிவிரதா சிரோமணியாகிய சாவித்திரியின் சரிதையுண்டு. அவ்வுத்தமி தனது மரித்த மணாளனை மீண்டும் தன்மதியால் விதியை வென்று உயிர்ப்பித்தனள். இதனால் நாமும் முயற்சியின் வலியால் சிறிதளவேனும் விதியை வெல்லலாம் என்பது பெற்றாம். 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்' என்னும் மூதுரையும் இதனை வற்புறுத்திக் கூறுகின்றது.

"முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்"

எனத் திருவள்ளுவர் திருவாய்மலர்ந்தருளியதும் நம் விதியின்பயன் எதுவேயாயினும் அதை நாம் நம் முயற்சியின்வலியால் வென்று நலமடையலாம் என்றும், முயற்சிசெய்யாவிடின் துன்பமே யடையநேருமென்றும் தெரிவிக்கின்றது. 'முயற்சி, மெய்வருந்தக் கூலிதரும்" என்னும் அவர் வாக்கும் முயற்சிக்குத் தக்க பலனைப் பெறுவோம் என்பதை விளக்குகின்றது. ஆதலின், சகோதர சகோதரிகளே! நமக்கு எப்பேர்ப்பட்ட விதிவலி பெரிதெனினும் அதைப் பொருட்படுத்தாது 'மதிவலிது' என்கிறபடி மதியால் மாற்ற முயலுவோமாக.

P S. அரங்கநாயகி, பூனமேடு.

குறிப்பு:— "தட்டேழ் மடந்தை நல்லாய்
 தோன்றிய சீவ ரெல்லாம்
இப்புவி யிடத்துச் சால
 எண்ணுவ ரெண்ணி யாங்கே
எப்படி முற்றும் முற்றா
 தெம்பிரான் ஒருப்பாற் கன்றி
அப்படி முற்றிற் கீழ்மே
 லாம்பகுப் பிரண்டுண் டாமோ?"

என்கிறபடி 'விதி அல்லது ஊழ்' என்றொன்றிருக்கவினாற்றான் பிரபஞ்ச சிருஷ்டியும் அதன் ஒழுங்காகிய நடைக்குரிய உயர்வு தாழ்வும் ஏற்படுகின்றன. இன்றேல் உலகம் உயிரற்ற பொருட் காட்சிச் சாலையை ஒத்தே விளங்கும். இந்தவிதி மிக்க அதிசயமானது. இதன் தன்மை எவராலும் அறிதற் கசாத்தியமாம்.

"அதிசயம் ஒருவரால் அறியப் போகுமோ
துதியறு பிறவியின் இன்ப துன்பந்தான்
விதிவயம் என்பதை மேற்கொ ளாவிடன்
மதிவலி யால்விதி வெல்ல வல்லமோ"

என்றார் கம்பநாடரும். ஆயினும், நாம் சோம்பலின்றிச் செய்யவேண்டிய முயற்சியைக் கைவிடலாகாது. அம்முயற்சி யதன் அளவிற்குரிய பலனை யளிக்காமற் போகாது. ப-ர்.

---

## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(313-ம் பக்கத்தொடர்ச்சி)

"பருவத்தே பயிர்செய்"

"பயிர்=பயிரை, பருவத்தே=(உற்பத்திசெய்தற்குரிய) காலத்திலே, செய்=(நீ உற்பத்தி) செய்வாயாக" என்பது இதன்பொருள்.

உலகத்தில் பயிர்த்தொழில் செய்வோரால் உண்டாக்கப்படும் ஒவ்வொரு பயிரையும் உற்பத்திசெய்தற்குத்தக்க பருவம் ஏற்பட்டிருக்கின்றது. எந்தப்பருவத்தில் எந்தப் பயிர் உற்பத்திசெய்தற்குரியதோ அதையே

அதில் உண்டாக்கவேண்டும். அங்ஙனமின்றிப் பருவந்தவறி ஒருபயிரை உண்டாக்கினால், அது விருத்தியடையாது; விசேஷபலனையும் தராது; சில சமயம் முளைக்காமற் போய்விடுவதுமுண்டு. ஆதலின், உழவுத்தொழிலால் மிக்க பயனடைய விரும்புவோர் பருவத்தில் பயிர்செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யாதவர், விவசாயத்தால் பயனடைதலின்றித் துன்புறுவர். இவ்வுண்மையை அடியில்வரும் சிறுகதை விளக்கும்:—

சோளம், வரகு, துவரை, மொச்சை முதலிய புன்செய்த் தானியங்கள் பயிரிடுவதற்குச் சில மாதங்களை உரியபருவமென்றும், சிலவகை நெற்களைப் பயிரிடுதற்குச் சில மாதங்கள் தகுமெனவும், இப்படியே வெவ்வேறு வகைப் பயிர்களுக்கு வெவ்வேறுவகைக் காலங்கள் பொருத்தமானவை யெனவும் விவசாயிகள், தங்கள் அனுபவத்தால் தீர்மானித்து அக்காலங்களில் பொருத்தமான பயிர்களை உற்பத்திசெய்யும் வழக்கத்தை மேற்கொண்டிருக்கின்றனர். இம்முறையை எல்லோரும் அனுசரிப்பது மரபாயிருப்பினும் சிலர், இதற்கு மாற்றமாக நடந்து கேட்டிற்குள்ளாவதுமுண்டு. ஒரு கிராமத்தில் பட்டந்தவறாமற் பயிர்செய்யும் விவசாயிகள் மிகுந்திருந்தனர். அவர்களோடு விபரீத புத்தியுள்ள ஒருவன் பயிர்த்தொழில் செய்துகொண்டிருந்தான். இவன், நல்லதைக் கெட்டதாகவும், கெட்டதை நல்லதாகவும் கருதும் இயற்கையுடையவன்; உலக இயல் சிறிதுமறியாமல், சகலமுந் தெரிந்தவன்போல் தற்பெருமை பேசக்கூடியவன்; அறிஞர் கூறும் அறவுரைகளைக் கொள்ளாமல் தன் துர்ப்புத்தி சென்ற வழியே செல்லும் மூர்க்கன். ஊரிலுள்ளார் நேரான வழியில் நடந்தால் இவன் அதற்கு மாறான வழியில் நடப்பான். ஒருவருஷத்தில் அவ்வூரில் மழையில்லாமல் பஞ்சமுண்டாகிவிட்டது. அதனால் ஜனங்கள் உணவுப்பொருள்கள் அகப்படாமல் துன்பப்பட்டார்கள். அடுத்தவருஷம் முன்னரே சித்திரைமாதந்தொடங்கி நல்ல மழைபெய்தது. முன் வருஷத்தில் தானியங்கள் கிடைக்காமல் வருந்திய ஜனங்கள் விரைவில் பயன் தரக்கூடிய புன்செய்த்தானியங்களை விதைத்து முன்னரே பயிர்செய்தார்கள். அந்தத் தற்பெருமையுடைய மந்த மதியன்மட்டும், மற்றவர்கள் பைத்தியக்காரத்தனமாக விவசாயஞ் செய்கிறார்களென்றும், தான்மாத்திரம் புத்திசாலித்தனமாக அதைச்செய்யவேண்டுமென்றும் நினைத்து, "இவர்கள் பயிர்செய்வன தாழ்ந்த விலையுள்ள தானியங்கள்; இவை நன்றாக விளைந்தாலும் சென்றவருடத்தில் உண்டான நஷ்டத்திற்கு ஈடுசெய்ய மாட்டா; ஆதலால் நாம் சற்றுப் பொறுமையோடிருந்து இரண்டுமாதங்களுக்குப்பின் பருத்தி சாகுபடிசெய்தால் முன் நஷ்டத்திற்கு ஈடுசெய்யும்படி மிக்க இலாபம் பெறலாம்" என்று மனோராஜ்ஜியம்செய்து அப்பருவத்தில் பயிர்த்தொழில் செய்யாமலிருந்துவிட்டான். அவன் பருத்தி சாகுபடி செய்யவேண்டியகாலத்தில் மழை யில்லாமற் போய் ஒருமாதத்திற்குப் பின் பெய்தது. அதனால் அவன் ஒருமாதங்கழித்துப் பட்டந்தவறிப் பருத்தி

சாகுபடி செய்தான். காலந்தவறியபடியால் பருத்திப்பயிர் செழிப்பாக உண்டாகவில்லை. அப்பயிர் இளம்பருவமாயிருக்கும்பொழுதே மாரிபொழிதல் மாறிவிட்டது. பருத்திச்செடிகள் பட்டுப்போய்விட்டன. அவன் ஒரு பலனையு மடையாமல் பஞ்சையாய் நெஞ்சங் கலங்கினான். சமயமறிந்து புன்செய்த்தானியங்கள் பயிர் செய்தவர்களுக்கு நல்ல பயன் கிடைத்தது. அவன் பருத்திப்பயிர் செய்யத்தொடங்கிய காலத்திலேயே அவர்கள் வித்தியதானியங்கள் விளைவுக்கு வந்துவிட்டன. அதனால் அவர்கள் முன் ஏற்பட்ட பஞ்சக்கஷ்டம் நீங்கிச் சௌக்கியமடைந்தார்கள்.

அறிஞர் கொள்கைகளை அவமதிக்கும் அந்த அறிவிலி, அம்மட்டோடு சும்மாவிராமல் மேலும் யுத்திசெய்ய ஆரம்பித்தான். அங்ஙனம் ஆலோசிக்கத்தொடங்கி, "நம்முடைய நிலத்தில் ஈரங்காத்துக்கொள்ளும் தன்மையில்லை; அதனாலேயே பருத்திச்செடிகள் பட்டுப்போயின; ஆதலால், அதில் பல தினங்கள்வரை ஈரச்சத்திருக்கும்படி ஒருயுக்திசெய்யவேண்டும்; உப்புமண்ணை நிலமெங்கும் பரப்பிவிட்டால் எப்பொழுதுமே ஈரம் நீங்காமலிருக்கு" மென்று கையிலிருந்த பொருள்களையும் செலவிட்டுத் தன்னுடைய நிலத்தில் அரைஅடி உயரம் உப்புமண்ணைக் கொண்டுவந்து பரப்பி உழுது புரட்டிவிட்டான். அந்த உவர்மண்சேரவே நல்லமண்ணையும் கெடுத்துத் தன்மயமாக்கிவிட்டது. அந்நிலமுழுவதும் உவர்நிலமாக மாறிவிட்டது. அதன்மேல் அவன் அதில் எந்தத் தானியத்தை விதைத்தாலும் முளைப்பதில்லை. அதனால் அவன் அடியோடுகெட்டொழிந்தான். அவ்வூராரெல்லோரும் அவனுடைய மதியற்ற செய்கையை யுணர்ந்து, "அறிஞர் கொள்கைகளை அவமதிக்கும் அகங்காரமுள்ள அறிவிலிகட்குக் கிடைக்கும் பயன் இதுவே" என்று அவனை இகழ்ந்தனர்.

(தொடரும்) செம்பூர்-வீ. ஆறுமுகஞ்சேர்வை.

---

## சகாப்த வருஷங்களின் சந்தேக நிவிர்த்தி.

பஞ்சாங்கங்களில் இவ்வருடங்களின் எண்கள் வித்தியாசமா யிருப்பதைப்பற்றிச் சில நண்பர்கள் சந்தேகங்கொண்டு வினவுகின்றனர். அவர்கள் அடியில்வரும் விஷயங்களால் ஐயம் நீங்குவாராக: அப்தங்களாகிய கலி அப்தம், சாலிவாகன சகாப்தம், பாண்டவாப்தம், விக்கிரமாதித்தாப்தம், போஜராஜாப்தம், கொல்லாப்தம் என்ற கொல்லம் ஆண்டு, பிரதாபருத்திராப்தம், இராமதேவாப்தம், கிருஷ்ணராயாப்தம், கிருஸ்து அப்தம், பசலி, ஹிஜரா ஆகிய இவ்வித வருஷங்கள், கத (இதுவரையிலும் சென்றுபோன) வருஷங்களாகவும், வர்த்தமான (இப்போது நிகழ்கின்ற) வருஷங்களாகவும் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. இப்படியிருக்கச் சில பஞ்சாங்கங்களில் கணிதக்காரர்கள் கலியுகனும், சாலிவாகனனும், கொல்லமாண்டு, விக்கிரமனும் முதலிய வருஷங்களைக் கதவென்றும் அல்லது வர்த்தமானம் என்றும் சொல்லாமல், வருஷங்களின் எண்களைமாத்தி

ரம் போட்டுவிடுகின்றார்கள். இன்னுஞ் சிலர் வர்த்தமான வருஷம் என்று சொல்லிவிட்டுக் கதவருஷ எண்களைப் போடுகின்றார்கள். ஆகையால் ஷை வருஷ எண்களில் ஒருவருஷம் வித்தியாசம் நேரிடுகின்றது. கிரகஸ்புட கணிதங்களுக்குக் கத வருஷமும், உலக வழக்கிற்கு வர்த்தமான வருஷமும் கொடுப்பது வழக்கம். கத வருஷத்தைவிட வர்த்தமான வருஷம் ஒன்று அதிகமாக விருக்கும். ஆகையால் குரோதன வருஷத்திற்குக் கத கலியுகவருஷம் 5026ம், வர்த்தமான கலியுகவருஷம் 5027ம், அக்ஷய வருஷத்திற்கு கத கலியுக வருஷம் 5027ம், வர்த்தமான கலியுகவருஷம் 5028ம் ஆகும். இவ்விவரத்தை நண்பர்கள் அறியவும். (நம் ஆனந்தபோதினிப் பஞ்சாங்கத்தில் வர்த்தமான வருஷங்கள் என்று தலைப்பில் சொல்லி எண்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ப-ரீ.

---

## சனிபகவான் நிலையும் பஞ்சாங்க வித்தியாசமும்.

சனிக்கிரக நிலையைப்பற்றிப் பஞ்சாங்கங்களில் வித்தியாச மிருப்பதாக ஐயங்கொண்டு சிலர் அதனை நமக்கெழுதி யிருக்கின்றனர். இன்னும் இதைப்பற்றிக் குரோதன வருஷம் மார்கழி மாதம் 29ம் தேதி (12-1-26) சுயராஜ்யா தமிழ்ப் பத்திரிகையில் 4வது பக்கத்தில் 6வது கலத்தில் "சனிபகவான் நிலை" என்று தலையங்கமிட்டு ஒரு வியாசமும் வெளிவந்துளது. அதைப்பற்றிய உண்மையைப் பலரும் அறியவேண்டியது அவசியமாதலின், அடியில்வரும் விஷயங்களால் அதனை விளக்குவாம்:—

மேற்படி வியாசத்தில் சனி விருச்சிகராசிக்குச் செல்ல 21600 கலை செல்லவேண்டுமென்று எழுதியிருக்கிறது. இது பிசகு. விருச்சிகராசிக்குச் செல்ல 12600 கலைதான் செல்லவேண்டும். 21600 கலை என்பது மேஷாதி 12 இராசி அடங்கிய மண்டலத்துக்குரிய மொத்தக் கலை ஆகும். சனி விருச்சிகராசியில் மார்கழிமீ பிரவேசித்துவிட்டதாக நம் ஆனந்தபோதினிப் பஞ்சாங்கம்முதலிய திருக்கணித பஞ்சாங்கங்களில் போடப்பட்டிருப்பது சரிதான்: திருக்கணிதத்திற்கும் வாக்கியத்திற்கும் சில வித்தியாசங்கள் உண்டு:

(1) சூரிய சித்தாந்தத்திலும் வாக்கிய கணனத்திற்கு மூலாதாரமாயுள்ள சித்தாந்தங்களிலும் சொல்லியிருக்கின்ற சனியின் மூல துருவத்திற்கும் சரியான துருவத்திற்கும் வித்தியாசம் சுமார் பாகை 1 கலை 4 வரையிலும் ஏற்படுகிறது. இது ஒரு பிசகு.

(2) நக்ஷத்திரமண்டல கெதி, கால அளவில் சுமார் 6½ நாள் வித்தியாசம். ஆகையால் வாக்கியகணித சனி பரிவிருத்திவாக்கியம் பிசகு.

(3) வாக்கிய கணனத்தில் சனியின் மந்தஜாவாக்கியம் சுமார் 1¼ பாகைவரையிலும் பிசகு.

(4) புஜாகோடி வாக்கியங்கள் மிகவும் துல்லியமாகவில்லை.

(5) சூரியமத்தியிலிருந்து பூமத்தியத்திற்கு மாற்றச்செய்யும் வாக்கிய கணித முறைகளில் பல பிசகுகள் இருக்கின்றன.

(6) ஒவ்வொரு கிரகங்களுக்கும், இதரகிரகங்களினால் உண்டாகும் ககோள சக்தி என்கிற ஆக்கிருஷண சக்தியினால் உண்டாகும் கெதிபேதங்கள் நம் முன்னோர்கள் கண்டு பிடித்து வாக்கிய கணிதத்தில் சேர்க்கப்படவில்லை. இது ஒரு தவறு.

(7) குரு, சனி கிரகங்களுக்குப் பிரத்தியேகமாக அனேக வருஷங்களுக்கு ஒருமுறை ஒழுங்காக ஏற்படும் கதிபேதம் (Long period inequality) நம் முன்னோர்களுக்குத் தெரியாததால் வாக்கியத்தில் சேர்க்கவில்லை. இது ஒரு தவறு. இந்த ஒரு காரணத்தாலேயே மாத்திரம் சனியின் ஸ்புடம் 49 கலை வரையிலும் வித்தியாசப்படும்.

மேலும் ஆரிய சித்தாந்தம், சூரிய சித்தாந்தம், பிர்ம சித்தாந்தம், கிரகலாகவம், சித்தாந்த தத்வ விவேகம், சித்தாந்த சர்வபௌமம் முதலிய முக்கிய சித்தாந்தங்களும், கணக்கிடமுடியாத இதர அனேக சித்தாந்தங்களும், அப்போதைக்கப்போது கணிதத்திற்கும், திருஷ்டி சோதனைக்கும் (Observation) வித்தியாசம் நேரிட்டு, அவ்வித்தியாசத்தைத் திருத்தும்பொருட்டு ஏற்படுத்தபட்டிருக்கின்றன. ஒரே சித்தாந்தம் எக்காலத்திற்கும் சரியாயிருக்கும்படி ஏற்படுத்தப்பட்டிருந்தால் இதர சித்தாந்தங்கள் ஒன்றுக்கொன்று வித்தியாசமாய் இருக்கும்படி உண்டாவதற்குக் காரணமில்லை. மேற்கண்ட சித்தாந்தங்கள் சுமார் 300, 400 வருடங்களுக்கு முந்தி ஏற்பட்டு அதுமுதல் விருத்தியில்லாமல் அப்போதைக் கப்போது வேண்டிய திருத்தங்கள் செய்யப்படாம லிருக்கின்றன. இந்தத் திருத்தங்கள் விஷயமாக மூணும்பண்ணை-கிருஷ்ண ஜோஷியர் தமது பஞ்சாங்ககணனம் முதல்பாகம் 19-ம் பக்கத்தில் "இப்படியாக நம் முன்னோர்கள் அப்போதைக்கப்போதுள்ள கதிகளைக் கண்டுபிடித்துக் கணிதத்தைப் புதுப்பித்து விருத்திசெய்து வந்திருக்க, ஆரியபட்டீயம் உண்டான பிற்பாடு அதாவது சென்ற 1380 வருஷங்களாக நம்முடைய கணிதம் விருத்தியின்றி அதே நிலையிலிருக்கின்றது." என்று எழுதியிருக்கின்றார். வாக்கிய கணித நிபுணராய்உள்ள இவரே இவ்வாறு எழுதி இருக்கிறது மிகவும் கவனிக்கத்தக்கது. நம் முன்னோர்கள் கணிதத்திற்கும் திருஷ்டிக்கும் வித்தியாசம் நேரிடும்போது எதுசரியென்று தீர்மானம் செய்யும் விஷயத்தில் (சந்தேகம் நேரிட்டால்) திருஷ்டிதான் சரியானதென்று அங்கீகரிக்கும்படி அறிஞர் தீர்மானித்திருக்கிறார்கள்.

திருக்கணிதமென்பது திருஷ்டி பரிக்ஷைக்கு (Observation)ச் சரியான கணிதம் என்பதாம். இதனாலேயே வாக்கிய கணிதத்தில் வல்லவர்களா யிருப்பவர்கள்கூட திருக்கணித முறையை அநுஷ்டிக்கிறார்கள். மேலும் திருக்கணிதத்திற்கும், வாக்கியத்திற்கும்உள்ள தாரதம்மியத்தை கிரஹணகாலத்தில் எல்லோரும் சுலபமாக அறியலாம்; சென்ற 1921ஞ

அக்டோபர்மீ 16உ ஞாயிற்றுக்கிழமை இரவில் நேரிட்ட சந்திரகிரஹண மும், 1924ஆ பிப்ரவரிமீ 20உ புதன்கிழமை இரவில் நேரிட்ட சந்திரகிர ஹணமும் வாக்கிய கணிதப்பிரகாரம் கணிதத்தில் சுமார் அரைமணிநேரத் திற்கு மேற்படத் தவறுதலா யிருந்தன. திருக்கணிதப்பிரகாரம் சரியாயிருந் தன. சென்ற சங்கராந்திதினம் நேர்ந்த சூரியகிரஹணத்தைக் கவனித்துப் பார்த்தவர்கள் திருக்கணிதம்தான் விசேஷமானதென்று அறிந்திருக்க லாம். வாக்கியகணிதம் தவறுதலாய் இருக்கிறதென்று அறிந்த சில பஞ் சாங்க கணிதர்கள், தங்கள் வாக்கிய பஞ்சாங்கங்கள் தவறுதலாய் இருக் கின்றனவென்று ஜனங்கள் அபிப்பிராயப்படாமல் இருக்கும்படிக்கு கிரஹ ணத்தைமாத்திரம் திருக்கணிதப்பிரகாரமும், மற்றவைகளை வாக்கியப் பிர காரமும் தங்கள் பஞ்சாங்கங்களில் வெளியிடுகின்றார்கள்.

வாக்கிய கணிதர்கள் தங்கள் கணிதத்திற்கு வேண்டிய திருத்தங் களைச்செய்து கணிப்பார்களாக. இவற்றை ஆராய்ந்து நண்பர்கள் திருக் கணிதப்படியுள்ள சனிக்கிரகநிலையே சரியானதென்பதை உணர்வார்க ளாக. ப·ரீ.

---

## சொல் வன்மை.

முன் நூலியற்றியாரும் உரைவகுத்தாரும் யாதா மொரு பொருள் பெறற் பொருட்டே முறையே சொற்பொருள்களைத் தத்தம் நூலிடையும் உரைக்கண்ணும் பொன்னெனப் பொதியவைத்துச் சிறந்தோராயினர். அன்னார் அவ்வகையின் மேம்பட்டாராதல்,

"ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி
யம்மூப் பாற்சொல் லுயர்திணை யவ்வே"

(தொல்-சொல்-கிள. 2) என்னும் இச்சூத்திரத்தில் ஆண்மகன் அறிவு முதலியவற்றான் சிறந்தவனாவன் என்பதை அறிவினர் உணர 'ஆடூஉ' வினை முதற்கண் வைத்த துணையானே தெளியப்படும். இத்தெளிவு, திருக்குறட் கண் நாயனார் மக்களை, "அறிவறிந்த மக்கள்" (புதல். 1) எனலானும் துணியத்தக்கதாம். இவைபோன்ற வெண்ணிறந்த பிரயோகங்கள் பொது ளிய முன்னவர் நூற்கள் புகழப் பெறுவனவன்றித் தம்மைப் பன்முறை யுங்கற்பார்க்குத் தம்மை யியற்றினோர் அறிவின் பெருமையினை, நன்கு தெளி விக்குந் திறத்தனவாயும், நூல் எழுதும் முறைமையினையும் ஒரு பொருள் பற்றிப் பேசும் முறைமையினையும் போதிப்பனவாயு மிலங்குவனவாம். ஆதலின், அவையிற்றினை முறையின் உணர்ந்தார், தாம் சொல்லவல்ல தொன்றனை ஆன்றவர் அவைக்கண் சொல்லுமிடத்து அவைக்குத் தம் மடக்கங்கூறி, அவையியல் புணர்ந்து, கேட்பார்ப் பிணிக்கும் வகையிற் சொல்வனவற்றைச் சொல்முறைமையிற் சொல்லித் தம் மறிவு புலப்படுத் தியவரா யடங்குபவராவர்.

"மேற்கூறியவாறே அறிவானமைந்த ஆன்றோர், தாம் உளராய காலத்தே யன்றித் தமக்குப் பின்னும் தம் புகழுடம்பை நிலவரைக்கண் நிறுவவல்ல நூற்களைச் சொற்பொலிவானும், பொருட்செறிவானும், பொலிந்துதோன்ற வியற்றினர்; அவர் தந்த தண்டமிழ் நூற்கண்காணும் செய்யுட்கள் இத்துறைஎாற் சிறந்தன" வென்பது,

"புவியினுக் கணியா யான்ற பொருடந்து புலத்திற் றாகி
அவியகத் துறைக டாங்கி யைந்திணை நெறி யளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா'வரியினை வீரர் கண்டார்"

(கம்-ஆர-சூர். 1) எனக் கம்பர், கோதாவரியின் சிறப்பினை விளக்குதற்கு அவ்யாற்றினுக்கும் ஆன்றவர் கவியினுக்கும் சிலேடை வகையினிற் பொருள் பயக்கும் இச்செய்யுள் கூறியவதனுனே யுணரக் கிடப்பதாம். இக் காட்டுச் செய்யுட் கிலக்கியமாம் செய்யுட்கள் பலவற்றை முன்னவர் செய் யுந்திறத்த நுண்ணறிவு பெற்றவரேனும் தம் அடக்கம் கூறு தொழிந் தனரோ? தம்மினும் வல்லுநருளராவரென்ற வுணர்வானும், கூறுதல் இலக்கணமாம் என்னும் அறிவானும்,

"கற்பா லுமிழ்ந்த மணியும் கழுவாதுவிட்டால்
நற்பா லழியும் நகைவெண்மதி போல் நிறைந்த
சொற்பா லுமிழ்ந்த மறுவும் மதியாற் கழூஉவிப்
பொற்பா விழைத்துக் கொளற்பாலர் புலமை மிக்கார்"

(சீவ-அவையடக்கம்) எனத் திருத்தக்கதேவர், தம் அடக்கம் கூறியது போன்று ஒவ்வொருவரும் தந்தம் நூற்கண் தத்தம் கருத்துவழி யவை யடக்கம் கூறினரன்றே. கூறிய அடிப்பட்ட சான்றோர் நெறிப்பட்டு ஒழு கும் குணத்தவர், அப்பெரியார்தம் ஒழுக்கமாம் அவையடக்கம் கூறுதலை யும் தமக்கும் ஒழுக்கமாகக் கொள்ளாதொழிவரோ! ஆதலின் அவைக்கண் ஒன்றனைச் சொல்லப் புகு மெல்லைக்கண் ஒருவர், 'வல்லாதன சொல்லி னும் அவற்றை ஆராய்ந்து கொண்மினென அவை யகத்தாரெல்லாருக்கும் வழிபடு கிளவி சொல்லுதல் அவையடக்கு' (தொல் பொரு-செய்-113. உரை) என்றவாறு அவையடக்கத்தினைக் கூறுவாராதல் வேண்டுவதாகும். ஆகுமது,

"அவையடக் கியலே யரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மின்என்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே"

(தொல்-பொருள்-செய் 113) என்றது கொண்டும் துணியப்படும். அங்ங னம் அவையடக்கம் கூறியவழி அவை யியல்பு உணர்தல் வேண்டப்படுவ தாகும்.

ஒருவர், ஒரு பொருள்பற்றிப் பேசுவது அவைக்கண்ணே யாதலின் தாம் சொல்வது கேட்கும் அவையி னியல்பினை முன் அறிந்து கோடல்

வேண்டும். அவைதான் புல்லவை, நல்லவை யென விருதிறத்ததாகும். புல்லவையாயின் அது தன் தன்மையினால் சொல்வார் தம் சொற்பொருள்களை யறியாது, சொல்லினாரை யிகழ்ந்துரைக்கும் இயல்பினதாகும். ஆதலின் புல்லவைக்கண் ஒன்று சொல்லினார் அவ்வவையானே இகழப்படுவாராவர். அன்றியும் அவர், நல்லவைக்கண் இருத்தற்குரியாரானும் 'இவன் அவை யறியாது இதுதன்னைச் சொல்லினன். இவன் அறிவிருந்தவாறென்னே!' எனக் குறை கூறவும்படுவார். ஆகவே ஒருவர், புல்லவைக்கண் ஒன்று சொல்லின், அவரை, பொருளறியாமையான் அவ்வவையும், அவையறியாமைநோக்கி நல்லவையும் இகழ்தலின், தாழ்ந்தாரவைக்கண் ஒன்று சொல்லுதலாகா தென்பது தானே பெறப்படுவதாம். பெறப்படுதல்,

"அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லாற்முற் கோட்டி கொளல்."

(குற-அவையறி. 10) என்றதனானும், அதன் உரையில், பரிமேலழகர், 'நல்லார், தம் மினத்தா ரல்லாதா ரவைக்கண் ஒன்றனையுஞ் சொல்லற்க; சொல்லின் அது தூய்தல்லாத முற்றத்தின்கணுக்க அமிழ்தினை யொக்கும்' எனக் கூறுதலானும் தெளியப்படும். நல்லவையோ வெனின் சொல்வார் தமது சொல்லின் திறம்கண்டு மகிழுமாதலின், பன்னூல்களையும் ஆய்ந்து அவற்றின் பயனை யாராய்ந்த கல்வியுடையார், அவ்வவைக்கண் சொல்லுதலானே, அவர்தம் அறிவுடைமை யெல்லார்க்கும் விளங்கித்தோன்றும். தோன்றுதல்,

"கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து"

(குற-அவையறி. 7) என்றதால் அறியத்தக்கதாம். ஆகவே புல்லவை நல்லவைகளின் தன்மை புணர்ந்து நல்லவைக்கண்ணே சொல்லுஞ் சொல் பயன் பெறுவதாதலின் ஒன்று சொல்வார் அவை யியல்பு உணர்வாராதல் வேண்டும். இனி அவையார்ப் பிணிக்கும் வகையில் சொல்வனவற்றைச் சொல்லுந் திறம் பேசுவாம்:

உணர்வார்முன் ஒருவர், ஒன்று சொல்லுதல் அவர்க்குத் தம்மறிவு தோற்றித் தாம் அவரான் நன்கு மதிக்கப்படுவாராதற்காதலின், ஒன்றனைச் சொல்லுமவர்க்குக் கேட்பாரைப் பிணித்தல் அறிவுடையரான் வேண்டப்படுவ தொன்றாகும். ஒருவர், கேட்பார்ப் பிணித்தலாவது, அவையகத்தார்தம் உள்ளம் கொள்வன சொல்லுதலானே, அவ்வவையினர் தாம் சொல்வனவற்றை விழைந்து கேட்பாராக அவர்தம் மனம் தம் சொல்வழி தொடரச் சொல்லுதலாம். கேட்பார் மனம் தொடரச் சொல்லுதலாவது, ஒருவர், தாம் கசடறக்கற்றுச் சொல்ல வல்லதொரு பொருளைச் சொல்லுதற்கண் அவையினைநோக்கித் தாம் சொல்லும் ஒவ்வொரு சொல்லினையும் தெளிவாக அவையிலுள்ளார் கேட்கவும், பொருள் தோன்றச் சொல்லொடு சொல்லினைச் சார்த்தியும், அவற்றைக் கேட்பார் தொடர்வாராகவும்,

அவையயல் கிளவிகளை யொழித்தும் தம் துணிபுக்கு ஆதாரமான கூற்றுக் களைச் சொல்லுதற்கண் விரைந்து சொல்லுதலை ஒழித்துக் கேட்பார் எளி திற் கேட்கவும் சொல்லுதலாம். மற்றும் ஒன்றனைப்பற்றியவளவிற் பல படித்தான அபிப்பிராயபேதங்கள் பல விருத்தல் இயல்பாதலினானும், ஒரு வர் சர்வமும் உணர்ந்திருத்தல் கூடாமையானும், ஒருவர்தம் முடிபே பிறர் கொள்ளத் தக்கதெனினும் அம்முடிபினையும் பிறர்கொள்ளும் முறைமை யின் கொளுத்தல் வேண்டுதலானும், ஒருவர், கேட்பார் மனம் அழுங்கவும், தம் வீறு தோன்றவும், 'இன்னார் இவ்விடத்துப் பிழைத்தார், இவர் இச் சிறுபொருள் அறியாராயினர், இவர் இதனை உணர்த்தவும் உணராராயினர்' என்ற இன்னோரன்ன பொருள் தருவனவற்றை வெளிப்படையாக வேனும், குறிப்பாகவேனும் ஒருவரைச்சுட்டி, அவர்க்கு இழிவுண்டாக மறந்தும் சொல்லாமையும் சொல்லும் முறைமையின்பாற் படுவதாகும்.

இனித் தமிழினைக் கற்றாருட் பெரும்பாலார், ஒரு கூட்டத்தின்கண் சொற்பொழிவு நிகழ்த்துதல் குறித்து ஒரு சிறிது கூறுவாம்: ஒரு சிலர் அவையடக்கம் கூறுங்காலத்தே அது கூறுதல் தமக்கு வேண்டாவென்ற வெண்ணத்தினாலோ, தமக்கு நிகராவார் அவ்வவைக்கண் இலர் என்ற செருக்காலோ கூறியும் கூறாததுமாகக் கூறுவர். சிலர் சொல்வனசொல்லி முடிக்கும்பொழுதில் இரண்டொருவர்க்கே தெரிய முணுமுணுத்துச்செல் வர். மற்றுஞ் சிலரோ கூறுஞ் சிரமத்திற்கே ஆளாகாமல் ஈண்டுக் கூறிய சிலரைநோக்க நல்லவராகி விடுகின்றனர். அவையடக்கம் கூறும் முறைமை இவ்வாறாக, மேல் பேசும் முறைமையினைப் பேசின் அது பேசுந்திறத்தள விற்படாத முறைமையினதாகும். ஒருவர் அவைக்கண்ணே ஒன்றைப் பேசும் எண்ணத்துடன் வந்திருப்பாராயினும் பேசப்புகுபொழுதில் அந் நோக்கமொழிய, அதுகாலை அவைத்தலைமை வகிக்குமவரையோ, தம்மரு கிற் றம்கண்ணிற்குப் புலமாவாராம் இரண்டொருவரையோ நோக்கிப் பேசுவாராகின்றனர். மேல் அவர் சொற்களையெடுத்துச் சொல்லுதலோ வெனின் சொல்லுஞ் சொற்கள்தாமும் அவர் தமக்கு அருகில் இருப்பார் தம் செவிக்கே எட்டாமற் போவனவாம். அவர்க்கே அங்ஙனமாயின் எட்டியிருப்பார் தமக்கு அவை எட்டும் தன்மையினைச் சொல்லாமலே ஒழித்தல் நன்றன்றோ?

இனிப் பேசுநர், பேசும் ஆட்சிச் சொற்களைக் கவனிப்பாம்: பேசுநர் தாம் இன்ன வின்ன சொற்களையே யாளுதல் வேண்டும் எனக் கற்றும் கேட்டுமிருப்பாராயினும் பேசுங்காலையில் தம்மனம் போனவாறே,

"அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்"

(தொல்-சொல்-எச். 46) எனும் சூத்திரக் கருத்தும் நோக்காமே இடக்கர் மொழிகளையும், இறப்பவிழிந்த உவமைகளையும் பேசும் பொருளுக் கேலா மேற்கோள்களையும் விரைவின் வாரி யெறிவாராவர். மற்றும் அவர் மேற் கோள் சூத்திரங்களையும் செய்யுட்களையும் தாம் எவ்வளவினும் விரைந்து

சொல்லு மாற்றலுடையார் என்பது ஒன்றே கேட்பார்க்குத் தோன்ற அவையிற்றைச் சொல்லவும் பழகியவராகின்றனர். சொல்லும் பிரயோகங்களின் வார்த்தைகளையும் அடிகளையும் தம்மிஷ்டமேபோலத் திரித்துக் கூறவும் அவர் முற்படுவாராகின்றனர். அவ்வாறு அவர் முற்படுவதற்குக் காரணம், தாம் சொல்வது வேதவாக்கென அவைகொள்ளும் என்ற கொள்கையோ? கேட்பார் அவற்றைத் தேடியாயுந் திறத்தவரல்லர் என்ற கருத்தோ? ஆயார் என்பதோ? பிறிதோ? அதனை அவரே அறிவர் அல்லது பிறர் அறியார். பிறர் அறியும் எண்ணத்தவராயின் அவர் தம் அறிவுக்கு, அவர்தம் செருக்கொன்றே காரணமென்பது புலனாவதாகும்.

சிலர் தாம் கண்டதொரு கருத்திற்குப் பிறர் ஒருவர் கண்டகருத்து மாறுபடுவதாயின், தாம் மற்றொன்றனை விரித்துரைக்கும் அவைக்கண் அக் கருத்தினை எவ்வாற்றலினாலேனும் புகவிட்டு அக்கருத்துடையாரை யிகழ்தலையே பயனாகக் கொள்வர். கொள்ளுமவர் ஒருவர் இல்லாவிடத்து அவரைக் குறைகூறுதற்குப் புகுமுன்,

"அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது"

(குற-புறங்-1) என்னு மிதனைக் கருதுவாராயின் குறைகூறுதலான் வரும் பழிபாவங்களுக்கு ஆளாவரோ? தம்மிடத்த குற்றங்களை யாய்ந்து அவை தம்முள் தாம் உளையுந்திறத்தவற்றைப் பிறருங் கூறுவாராவர் என்னும் உணர்வு தோன்றுதலானே அங்ஙனம் பிறரை இகழாமலன்றே ஒழிவாராவார்.

இனி ஒரு சாரார், தாம் ஒன்றில் வல்லுநராயின் தாம் வல்லது அவ்வொன்றே தாம் காணும் எந்நூலினும் உளதாகக்கொண்டு 'இந்நூல் கூறுவதும் இதுவே; அந்நூல் கூறுவதும் அதுவே' எனப் பயன் கூறி முடிப்பாராவர். இவ்வகை முடித்தல்தான், கேட்டார்,

"... ..........வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்'

(குற-அவையறி. 4) என்றதுகொண்டு வாளாவிருத்தற் பயனைக் காட்டவல்லதாம்.

இதுவரை கூறியவற்றான், அவைக்கண் ஒன்று சொல்லுதலான் அவ்வவைதான்தரு மேம்பாடுகொள்ள விழைபுநர் அவைக்கு அடக்கங்கூறி, அவைநோக்கிச் சொல்லவல்லவற்றைச் சொன்முறையில் கேட்பார் மனங்கொளச் சொல்வாராயின் தம் விழைவுமுற்றித் தாம் அறியாதனவும் அறிவுடையரான் அறிந்து மேம்படுவாராவர் என்பது தெளிவாம். இது,

"கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்"

(குறள்-அவையஞ். 4) என்பதனாற் றேற்றமாம்.

N திருவேங்கடத்தையங்கார், தமிழ்ப்பண்டிதர்
C. R. C. High School, Purasawalkam.

## நடுவெழுத்தலங்கார விடை.

ஆனந்தபோதினி புத்தகம் 11. சஞ்சிகை. 8. பக்கம் 332 ல் வெளியான நடுவெழுத் தலங்காரத்துக்கு விடையாவது :—

### விருத்தம்.

சங்கராபரணமதா மிராகத்தின்பேர் தனமாகு மகளிரங்கந் தாணு வூர்தி
பங்கமிலா நந்திசத மோரெண்ணின்பேர் பகர்திருக்கில்லாதான்பேர் சுபோ [கியாகுஞ்
சங்கையிலாப் புதிதுநூதனமதாகுஞ் சார்முனிவு சினத்தினபி தானமாகும்
அங்கனையு மாரோவென் றயிர்ப்புற்றீரே லானந்தபோதினியா மிவை [யாமே.

இராகப் பேர்— சங்கராபரணம்— சங்கர்—ஆ—பரணம்.
மகளிர் அங்கம்— த—ன—ம்
தாணு (சிவன்) ஊர்தி (வாகனம்)— ந—ந்—தி
எண்ணின் பேர்— ச—த—ம்
திருக்கில்லான் (குற்றமில்லாதவன்) பேர்— சு-போ-கி — (சுயானுபோக [முள்ளவன்)
நூதனப் பேர்— பு - தி - து
சினத்தின் பேர்— மு-னி - வு

சங்கராபரணம் முதலியவற்றின் நடு வெழுத்துக்களைச் சேர்க்க "ஆனந்தபோதினி" என்றாகும். இப்பெயரே ஷை நடுவெழுத் தலங்காரத்தில் அமைந்ததாம்.

கோபாலகிருஷ்ணய்யர், சர். 4304, மதுகரை.

குறிப்பு:—இவ்விடை சரியாயிருக்கின்றது. ஆனால் சிலர் நடுவெழுத்தலங்காரம் மூன்றெழுத்துப் பதங்களில் அமையவேண்டுமென்றும், சங்கராபரணம் மேற்பட்ட எழுத்துக்களை யுடையதாயிருப்பது சிறப்பாகாதென்றும் கூறக்கூடும். இன்னும் இதற்கு "அவிநாசி. வெ. மாணிக்கம்" என்பவரும், தொரவலூர். பாலசுப்பிரமணிய அய்யரும், விடை யெழுதியிருக்கிறார்கள். இவருள் மாணிக்கம் என்பவர் இராகம்—பியாகு என்றும், திருக்கிலான்—கபோதி என்றும் எழுதுகிறார். பியாகு—மூன்றெழுத்துப் பதமாதலின் பொருத்த முடைத்தென்பது அவர் துணிபுபோலும். திருக்கு—கண் ஆதலால், திருக்கிலான்—என்பதற்குக் 'கபோதி' என்றதும் பொருத்த முடையதே. பாலசுப்பிரமணிய அய்யரவர்கள் எழுதியதில், திருக்கிலான்—கபோதி என்று எழுதியிருக்கிறார்கள்; மற்றவைகளை கோபாலகிருஷ்ணய்யரவர்களைப்போலவே யெழுதி யிருக்கிறார்கள். பின் தபால்களில் தேவகோட்டை சி. டி. சுந்தரராஜய்யங்கார், பறங்கிப்பேட்டை-அ. சுப்பராய செட்டியார், வத்திரா இருப்பு-வெ. கி. இராமசாமி, அவலூர்பேட்டை - பி. கு இராமலிங்கசெட்டியார், நாமக்கல்-வெங்கட்டரமண ஐயர் முதலிய வேறு சிலரும் எழுதியிருக்கிறார்கள். இவர்களுள் ஒருவர் இராகம்—சஹானா வென்றும், மற்றொருவர்—பியாகு என்றும், பின்னொருவர்—வராளி என்றும் எழுதியிருக்கிறார்கள். இவர்கள் குறிப்பிட்ட மற்ற பெயர்கள் 'மாணிக்கம்' என்பவர் எழுதியவையே. இவர்களின்றி இன்னும் சிலரும் பின்னர் எழுதியிருக்கிறார்கள். அவர்கள் எழுதியவற்றுள் சில சரியா யிருக்கின்றன. சிலவற்றின் வார்த்தைகளில் சிலபொருந்தாமலிருக்கின்றன.

ப-ர்.

# பகவத்கீதை வசனம்.

(328-ம் பக்கத் தொடர்ச்சி.)

சுருதி கூறுவதாவது:—அஞ்ஞானியை ஆற்றியபாவமும் ஆற்றாத அறமும் தாபப்படுத்துவதேபோலப் பிரஹ்மவேத்தாவாய அறிஞன் செய்த பாவமும் செய்யாத புண்ணியமும் தபிப்பியாவாம். இப்பிரஹ்ம வேத்தாவிற்கு மகாப்பிரபாவமுளது, புண்ணியத்தானே மகிழான், பாவத்தானே பரிதவியான், யான் பிரஹ்மரூபனெனப் பிரத்தியக்கபின்னீப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்துத் தத்துவவேத்தா புண்ணியத்தோடு பற்றுறான். நீரிலுறுந் தாமரையிலையை நீர் பற்றுறாததேபோலத் தத்துவவேத்தாவைப் புண்ணியபாவம் பற்றுறாவாம். இத்துணையானே இப்பொருள் துணியப்பெறும்:—அகங்காரத்தை யடையாதவனும், மதியிற் பற்றுறாதவனும் ஆகிய தத்துவவேத்தாவானவன் துர்மதியினும் விலக்ஷணசுமதியாவன். பரமார்த்த தரிசியாய அவன் ஆன்மாவைக் கேவலம் அகர்த்தாவாகவே காண்பன்;ஒருகாலும் கர்த்தாவெனவெண்ணுன். அவனுக்குக் கர்த்திருத்துவாதியபிமான மின்மையினுனே அநிஷ்ட இஷ்ட மிசிரம் என்னும் மூவகைக் கருமபலத்தை யொருகாலுமடையான். இத்துணையே இக்கீதாசாஸ்திரத்தின் பொருளாம். இப்போது ஸ்ரீபகவான் தத்துவஞானியைத் துதிக்கும்பொருட்டு மொழிந்த அகங்கார அபாவத்தையும் மதிப்பற்றின்மையையும் கூறி யருளுகின்றார்:—தத்துவஞானி எல்லாப் பிராணிகளையும் கொன்றும் கொல்லான; அதாவது அசங்க ஆத்மா எப்போதும் அகர்த்தா ஆவேன் என அகர்த்தாவடிவத்தின் சாக்ஷாத்காரத்தானே கொல்லுதல் வடிவக்கிரியையின் கருத்தாவாகான்; இதனுனே பந்திக்கப்படமாட்டான்=ஹநநரூபக்கிரியையின் காரியரூப அதருமபலத்தோடும் சம்பந்தத்தையடையான். கொன்றும் பந்தமடையான் என்பதனுனே ஸ்ரீபகவான் தத்துவசாக்ஷாத்காரத்தின் மகத்துவத்தைத் திருவாய்மலர்ந்தருளினரேயன்றித் தத்துவ வேத்தாவானவன் சர்வப்பிராணிகளையும் கொல்வான் என்பதில் திருக்கருத்தின்றாம். சர்வான்மதரிசியினிடத்தில் எல்லாப் பிராணிகளின் கொலைசெய்தல் சம்பவியாதாம். அவனிவ்வுலகங்களைக் கொன்றும் என்பதனுனே தத்துவவேத்தாவின்பால் ஹநநக்கிரியையின் கர்த்தாத்தன்மை கூறியது இலௌகிக திருஷ்டியானேயாம். கொல்லான் என்பதனுனே அவனிடத்தே கருத்துருத்துவ நிஷேதஞ் செய்யப்பட்டது, சாஸ்திர திருஷ்டியினுனேயாம். ஆகையாற் கொன்றுங் கொல்லான் என்னும் இரண்டும் முரண்படாவாம். இந்நூலினுதியில் ஆன்மாவின்கண் ணெல்லாக் கருமங்களின் றீண்டாமை பிரதிஞ்ஞை செய்தருளப்பெற்று, பின்னரும் அதனையே திரப்படுத்தியருளி, பின் அறிஞனுக்குச் சர்வகருமங்களின் அதிகாரநீக்கம் சுருக்கமா யருளப்பெற்றது. அவ்வதிகார நீக்கமே இடையிடையே பிரசங்கத்தை யனுசரித்து வித்தரித்து விளம்பி யருளப்பெற்றது. இத்துணையே கீதாசாஸ்திரத்தின் பொருளாம். இவ்வாறு சாஸ்திரார்த்தங்களின் ஒருமை யுடைமையைக் காண்பித்தருளற்பொருட்டே சருவ கரும அதிகாரநீக்கம் உபசங்காரஞ் செய்தருளப்பெற்றது. ஆகையால் இப்பொருளாயது:—அஞ்ஞானத்தினுலே கற்பனை செய்யப்பட்ட அதிஷ்டானுதி 5 அனுன்ம பதார்த்தங்களானே செய்யப்பட்ட விதி நிஷேதகருமங்களெல்லாம் அகம்பிரஹ்மாஸ்மியென்னும் ஆத்மவித்தையினுனே மூலசகிதமாய்க் கெடுமாதலினுனே பரமார்த்த சந்யாசிகளை அநிஷ்டாதி 3 வகைக் கருமபல மடையாவாம் என அருளியது பொருத்த முடையதேயாம்.

அகர்த்தாவாதியாய ஆன்மாவின் சாக்ஷாத்காரமே பரமார்த்த சந்யாசமாம். இது ஜனகன் அஜாத சத்துருமுதலிய தத்துவவேத்தாக்களாகிய கிருகஸ்தர்களிடத்து மிருந்தது. ஆகையா லவர்களும் பரமார்த்த சந்யாசமுடையவரேயாவர். ஜனகாதி கிருகஸ்த ஞானிகளிடத்தில் அவரது வருணாசிரம கருமம் காணவந்ததாயினும் தத்துவவேத்தாக்களாகிய பரமஹம்ச சந்யாசிகளிடத்தில் நுகர்வினைவயத்தால் பாதித அனுவிருத்திகொண்டேனும், அன்னியரது கற்பனையினாலேனும், பிக்ஷாடனாதிகள் பிரதீதியாவதே போலப் பிரபல நுகர்வினைவயத்தால், கூறிய இருவகைகொண்டு ஜனகாதிகளிடத்தில் கருமங்களின் றரிசனம் மூரண்படாதாம். இதனானே, ஆன்மஞான பலபூத வித்வத் சந்யாசஞ் சொல்லப்படும்; சாதனபூத விவிதிஷா சந்யாசமோ முதலி லிவ்வாறுண்டாகாதாயினும் ஞானத்தின் பின் இவ்வாறேயாம்.

[முன்னர் அதிஷ்டானாதி ஐந்தும் சர்வகருமங்களின் ஹேதுவெனக் கூறியருளி ஆன்மாவிற்குச் சர்வகருமங்களின் பரிசமின்மைகூறி யருளப் பட்டது; இப்போது முன்னருளிய பொருளையே ஞானஞேயாதிப் பிரக்கிரியையாக வருணிப்பதுடன், திரைகுண்ய பேதவியாக்கியானத்தானே முன்னினும் விலக்ஷணமுறையாக வருணித்தருளுகின்றார்.]

ஹே அர்ச்சுன! ஞான ஞேய பரிஞாதா வென்னும் மூன்றும் கர்மப் பிரவர்த்தகங்களாம். கரணம் கர்மம் கர்த்தா என்னும் மூன்றும் கர்மாசிரயங்களாம். ஹே கௌந்தேய! வஸ்துவின் உண்மை வடிவத்தை யொளிர்விப்பது ஞானமாம்=பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களானே உண்டாய குடமுதலியவற்றின் பிரகாச வடிவக் கிரியை ஞானமென்பதாம். ஞானரூபக்கிரியைக்குக் கர்மபூதமாயகடாதிகள் ஞேயங்களாம். ஞானரூபக் கிரியைக்கு ஆசிரயபூதமும், அந்தக்கரணரூப உபாதியானே நன்கு கற்பிக்கப் பெற்றதும், ஆகிய போக்தா பரிஞாதாவாம். அம்மூன்றும் ஒன்றாகக் கூடியே இஷ்ட அநிஷ்டரூப கருமங்களைத் தொடங்கும்; ஒன்றுகூடாமல் எக்கருமத் தொடக்கமு மிலதாம். ஏனெனின், ஞேயஞாதாக்க ளிருந்த போதினும் ஞானமிலதாயபோது பிரவிருத்தி யுண்டாகாதாம். ஆகலின் பிரவிருத்தியின்கண் அந்த ஞானத்திற்கு அவசியம் காரணத்தன்மையை யங்கீகரிக்கவேண்டும். ஞான ஞாதாகக ளிருந்தபோதினும் தேசகாலத்தானே ஞேயந்தடையாயின் பிரவிருத்தி யாகாதாகலின் அதன்கண் ஞேயத்தையும் அவசியம் காரணமெனக் கொள்ளவேண்டும். நித்திரையில் வாசனை வடிவஞான ஞேயங்களிருந்தபோதினும் ஞாதாவில்லாமையின் பிரவிருத்தி உண்டாகாதாகலின், அதன்கண் ஞானத்தையும் காரணமாக அவசியம் அங்கீகரிக்கவேண்டும். ஆகையால் மூன்றும் ஒன்றுசேர்ந்தே சருவகருமங்களையும் தொடங்கும். இப்பொருளை ஸ்ரீபகவான் மூன்றும் கர்மப்பிரவர்த்தகங்களாம் என அருளினர். ஞானாதிமூன்றும் ஒருங்குசேர்ந்தே கருமப்பிரவர்த்தகமாம். அனன்ம பதார்த்தத்தின்கண்ணே பிரேரணீயத் தன்மையும் பிரேரகத்தன்மையுமாம். அசங்க ஆன்மாவின்கண்ணே அவ்விரண்டு மின்றாமென் றறிந்துகொள்க. எதன் வியாபாரத்தின் பின்னர்க் கிரியையின் சித்தியாமோ அதுகாரணமாம். அதுவும் உள்வெளி வேற்றுமையானே இருவகையாம். செவி முதலியவையோ வெளிக்கரணமாம். மனாதிகளோ உட்கரணமாம். கர்த்தாவின் கிரியையில் இசையத்தக்க இஷ்டகாரகம் கருமமாம்; அதுவும் உற்பாத்தியம், ஆப்பியம், சம்ஸ்கார்யம், விகார்யம், என்னும் வேற்றுமையானே நான்குவகையாம். அவற்றுள் உற்பத்திக்குத் தகுதியாயது அல்லது யாது முன்னிராது பின்னுண்டாமோ

அது உற்பாத்தியமாம்; முன்னர் இருந்தே அடையப்படுவது ஆப்பியமாம். குணங்கொள்ளல் மலந்தள்ளல் வடிவசமஸ்கார யோக்கியமாயது சமஸ்காரியமாம்; முன்னவஸ்தையைவிட்டு வேறு அவஸ்தையின் அடைவு விகாரம், அதையடைவது விகார்யமாம்; யூபஸ்தம்பம் உற்பத்தியாக்கலும், தன் வேதசாகைபடித் தடைதலும், நெல்லைப் புரோக்ஷித்துச் சமஸ்கரித்தலும், சோமக்கொடியைப் பிழிந்து விகாரப்படுத்தலும், முறையே இந்நான்கினுக்கும் உதாகரணங்களாம். இதரகாரகங்களால் அப்பிரயோஜ்யமும் சகலகாரகங்களின் பிரயோஜகமாயதும் கர்த்தாவாம். அஃதிங்கு சிதசித்தின் கிரந்திரூபமாய்க் கொள்க. காரணங் கருமம் கருத்தாமூன்றுமே பரஸ்பரம் சமுச்சய பாவத்தையடைந்து கருமசங்கிரகமாம்—கருமங்கலின் ஆசிரய ரூபமாம். காரணங் கர்மங்கர்த்தாவென்னும் வசனத்தின் ஈற்றின் இருக்கும் என்னும் என்ற சப்தத்தானே சம்பிரதானம், அபாதானம், அதிகரணம் என்னும் மூன்று காரகங்கட்கும் காரணாதி மூன்றிலே உள்ளடக்கமெனக் கொள்க. நல்ல மேன்மைமதியானே எவர்க்குப் பொருளீயப் பெறுமோ அது சம்பிரதானமாம்; வேதவேத்தாவாகிய மறையவனுக்குக் கோக் கொடுத்தல் உதாகரணமாம்; மறையவன் சம்பிரதானமாம். சம்யோக வாயிலாய் விபாகத்தில் அவதியாதோ அதே அபிதானமாம். இமாசலத்தினின்றும் ஸ்ரீ கங்காதேவி யிறங்குதல் போலவாம். பர்வதம் அபாதானகாரகமாம். ஆதாரமென்பது அதிகரணமாம். இவ்வாறு கருத்தா, கருமம், காரணம், சம்பிரதானம், அபாதானம், அதிகரணமாம், என ஆறுகாரகங்கள் இலக்கணநூலிற் பிரசித்தங்களாம். "இந்திரன் ருமமையைக் கரத்தாற் கொய்திறைவனுக்குத் தந்திருங் குற்றத்தினியலின் விண்மேலிருந்தானெனவும், வந்திங்காரகமெல்லாம" இவை முறையே யுதாகரணங்களாம். சம்பிரதானாதி மூன்றையும் கருத்தாதிகளில அடக்கி ஸ்ரீ பகவான் கர்த்தாதி மூன்றைக் கூறியருளினர். இவ்வாறு மூவகைத்தகைமையடைந்த காரகமாறன் கூட்டமே சர்வக்கிரியைகளின் ஆசிரயமாம. கூடஸ்த ஆத்மா எக்கிரியைக்கும் ஆசிரயமாகாதாம், ஆகலின் துணிபு இதுவாம்:—யாது யாது கருமப்பிரோகமாமோ, ஆசிரயமாமோ, அவையாவுமே காரகரூபமேயாம், திரிகுணாத்மகமேயாம். ஆன்மாவோ காரகபாவமற்றதும், முக்குணங்கள் அற்றதும் ஆமாதலின் சர்வகர்மங்களின் பரிசமற்றதாம் என்றறிக. சீடன்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(334-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆனந்த:—"இவையாவும் நான் விபரமாய்க் கூறுகிறேன். அதற்குள் அவசரப்பட்டு என்னை வெளியிட்டுவிட்டால் உன் காரியத்திற்கே கெடுதியாய்விடும்." என்றான்.

அம்பா:—"இதில் ஏதோ பெரிய மர்மம் இருக்கிறது. அமிர்தம்மாள் இதற்கு உடந்தையா யிருக்கிறாள். அவள் உன்னை யொரு சினேகன் போல் எனக்கு அறிமுகமாக்கி யிருக்கிறாள்" என்றாள்.

ஆனந்த:—"நான் பிரமாணிக்கமாய்க் கூறுகிறேன். நாடோடியைப்போல் வந்தவன் நானென்று அந்தம்மாளுக்கு எள்ளளவுகூடத் தெரியாது" என்றான்.

அச்சமயம் மேல்மாடிக்குச் சென்றிருந்த அமிர்தம்மாள் வந்துவிட்டாள். அம்பாலிகை மர்மத்தை வெளியிட்டுவிடுவாளென்றே ஆனந்தவிங் அதற்கு ஆயத்தமா யிருந்தான். ஆனால் அம்பாலிகை அப்படி யொன்றும்

செய்யவில்லை. பேசாமல் தன் வீணையை யெடுத்துக் கையில் வைத்து வாசித்துக்கொண்டிருந்தான்.

புயற்காற்று இடி மின்னல் முதலிய முழக்க மனைத்து மோய்ந்து நிதானமாய் மழை பெய்துகொண்டே யிருந்தது. அம்பாலிகை யவனை நோக்கிப் புன்னகையோடு,

"அய்யா! இப்போது வேறுவழியில்லை. நீர் இரவு என் விருந்தாளியா யிருக்கவேண்டியதே" என்றாள்.

ஆனந்தஸிங்:—வேண்டாம் வேண்டாம்; நான் போய்விடுவேன்.

அம்மாது.—"போக முடியாது. பாதை முழுமையும் வெள்ளம் நிறைந்திருக்கும். தற்செயலாய் வந்து சிக்கிக்கொண்டபின் இந்த ஒரு இரவு மட்டுமேனும் நமது விருந்தாளியாய் இருந்தே தீரவேண்டும்" என்றாள்.

கடைசியில் ஆனந்தஸிங் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. அவனுக்கு மனதிலென்னமோ தற்செயலாய் அவ்வாறு அங்கு இரவில் தங்கியிருக்க நேர்ந்தது மிக்க சந்தோஷமே. போஜனம் முடிந்து தனக்கு ஆயத்தம் செய்யப்பட்ட அறைக்குள் உட்கார்ந்ததே தன் நிலைமையைப்பற்றிச் சிந்திக்க முயன்றான்.

அவனுக்கு வியப்பும் மிக்க கலவரமுமாகவேயிருந்தன. ஒன்றும் சரியாய் விளங்கவில்லை. அம்பாலிகை சிறைவைக்கப்பட்டிருக்கவில்லையென்று சந்தேகமின்றித் தெரிகிறது. அதிலும் இன்னொரு விசேஷம். அவள் மிக்க மன நிம்மதியோடு சந்தோஷமாகவே யிருக்கிறாளன்றி இத்தகைய பெரிய ஆபத்தில்சிக்கி யிருப்பவளாகவும் மாண்டுபோனாளென்று சுடலையில் புதைக்கப்பட்டு மறுபடி வெளியில் கொண்டுவரப்பட்டவளாகவும் சற்றேனும் தெரியவில்லை. ஆதலால் இதில் இன்னும் நமக்கு விளங்காத பெரிய மர்மம் எதுவோ விருக்கிறதென்று அவனுக்கு விளங்கியது.

அங்கு வரும்போது அவன் எண்ணிக்கொண்டு வந்ததாவது:—"நாம் அப்பெண்ணைக் காணவேண்டியதே பாக்கி. 'நான் உன்னை விடுவித்துக் கொண்டுபோக வந்தேன்' என்றுமட்டும் கூறிவிட்டால் உடனே அவள் நம் கூடவே வந்துவிடுவாள்" என்பதே. கடைசியில் இப்போது பார்த்தால் அம்பாலிகை மிக்க சாமார்த்தியமும், தைரியமும், ஆழ்ந்த யோசனையும், நிதானமும், மனதிலுள்ளதைச் சற்றும் வெளியிடாது மறைத்து வைத்துக்கொண்டிருக்கும் வல்லமையும் உடையவளா யிருக்கிறாள்.

ஆனந்தஸிங் யாவும் சிந்தித்துப்பார்த்துக் கடைசியில் "நாம் இப்போது வாயைத் திறக்கலாகாது; இங்கிருக்கிற மர்மத்தை முன்னே யறிந்துகொள்ளவேண்டு" மென்று தீர்மானித்துக்கொண்டான். அவன் எவ்வளவோ ஆச்சரியமான குற்றங்களையெல்லாம் பார்த்திருக்கிறான். அம்பாலிகையின் சொத்தைக் கறுப்பண்ணன் அபகரிக்கமுயன்றது சாதாரணமாய்ச் சம்பவிக்கிற குற்றமே. ஆனால் மோசத்திற்குள்ளான ஆசாமி தனக்குத் தீங்கிழைத்தவர்கள் கூட்டத்திலேயே கூடிக்கொண்டு தனக்கொரு கெடுதியும் சம்பவியாததுபோல் நிம்மதியாகவும் சந்தோஷமாகவும் இருப்பதுதான் பெரிய வியப்பாயிருந்தது.

அன்றிரவு முழுமையும் அவனுக்குச் சற்றேனும் நித்திரை பிடிக்கவேயில்லை. மறுநாட்காலை யெழுந்ததும் குளிர்ந்த காற்றில் சற்று உலவலாமென்று தோட்டத்திற்குள் பிரவேசித்தான். சற்றுதூரம் சென்றபின் தற்

செயலாயத் திரும்பிப் பார்த்தபோது யாரோ ஒரு ஸ்திரீ வருவதாய்த் தெரிந்தது. அங்கே நின்று உற்றுப்பார்த்தான். வருவது அம்பாலிகை யென்று அறிந்ததே அங்கேயே நின்றான்.

சற்றுநேரத்திற்குள் அம்பாலிகை அவனருகில் வந்ததும் வந்தன மளித்து அங்கு அடர்ந்த புஷ்பச்செடி கொடிகளின் மறைவில் இருந்த ஒரு பலகை யாசனத்தைக்காட்டி "வாரும்; இங்குவந்து உட்காரும்" என்றாள்.

ஆனந்தலிங் அவ்வாறே யுட்கார்ந்ததும் "இனியொளிக்காமல் நீர் இங்குவந்த விஷயத்தை விவரமாய்க்கூறும்" என்றாள். அதன்மேல் இரு வர்க்கும் கீழ் விவரித்தபடி சம்பாஷணை நடந்தது:—

ஆனந்த:—நான் உன்னைக் கண்டுபிடிக்கவே வந்தேன்.

அம்பாலிகை:—அது எனக்குத்தெரியும். உம்மை யார் அனுப்பியவர்?

ஆன:—பவானியம்மாள்.

அம்:—அது பொய்.

ஆன:—இல்லை. முழுதும் உண்மை.

அம்:—நீர் ஒரு உளவாளி.

ஆன:—ஆம்; என்தொழிலே உளவுகண்டு பிடிக்கும்தொழில்.

அம்:—அப்படியாயின் நீர் ஒரு துப்பறியும் உத்தியோகஸ்தரோ?

ஆன:—ஆம்.

அம்:—அப்படியானால் என்னைக் கொல்ல முயற்சி நடந்தது உமக்குத் தெரியும்?

ஆன:—இல்லை, தெரியாது. ஆனால் உன் விஷயமாய் நடந்த ஆச்சரியமான சம்பவம்மட்டும் எனக்குத் தெரியும். நீ இறந்துபோனதாக எண்ணப் பட்டுச் சவப்பெட்டியில் வைக்கப்பட்டிருந்தபோது உன்முகத்தைக் கண்டேன்.

(தொடரும்) ஆரணி-குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரங்கள்.

ஓரதிசயப்பிறவி:—ஆனைமலை, R. கோபால முதலியாரின் வேலை யாள் மொட்டையண்ணன் வீட்டில், 13—2—26 ல், ஒரு கோழி, சிரசு முதல் கழுத்துவரையில் ஒரே பாகமாகவும், மற்ற பாகம் இரண்டாகவுங் கொண்டு, இரண்டு சிறகுகளும் நான்கு கால்களுமுள்ள குஞ்சு ஒன்றைப் பொரித்திருக்கிறது என்று நமது ஆனந்தபோதினியின் 17880-நெம்பர் சந்தாதார்; ஆனைமலை, A. S. பால வெங்கடராம் செட்டியார் எழுதுகிறார்.

கொசு உபத்திரவ நிவர்த்தி:—வீட்டைச்சுற்றித் துளசிச் செடிகளை வளர்த்துவந்தால் கொசுக்களின் உபத்திரவம் இராதாம். இச்செடிக்கு ஜுரம் வராமற்செய்யுங் குணமும் உண்டாம்.

பிரசவ விநோதம்:—திருநெல்வேலிக்கு மேற்கேயுள்ள கோடக நல்லூரில் ஒரு வீட்டில் ஒரேநாளில் நான்கு பிள்ளைகள் பிறந்து இரண்டு உயிரோடிருந்தனவாம்.

நாய் வயிற்றில் ஆனைக்குட்டி:—பர்மாவில் தாராவாடி ஜில்லாவில் தொவுஞ்சையில் ஒரு நாய் யானைக்குட்டியை ஈன்றது. குட்டி ஆறுமணி நேரம் உயிரோடிருந்ததாம். அந்தக் குட்டியைத் திராவகத்தில் விட்டு வைத்திருக்கிறார்களாம்: குட்டி யானைக்குட்டிபோலவே யிருக்கிறதாம்.

௦

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

அக்ஷயஹு சித்திரைமு—கலியுகாதி 5028, சாலிவாகனம் 1849

பசலி 1335—கோல்லமாண்டு 1101—ஹிஜரி 1344,

இங்கிலீஷ் 1926ஹு ஏப்ரல்மு—1926ஹு மேமு

| சித்திரை | ஏப்ரல்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | செவ் | பிர24-57 | அஸ்30-25 | சித்60 | வருஷப்பிறப்பு, யுகாதி டாண்டிகை |
| 2 | 14 | புத | துதி20-20 | ப✕27-43 | சி27-43அ | கிருத்திகை விரதம் |
| 3 | 15 | வியா | திரி17-18 | கிரு26-43 | மர60 | ஆண்டோளன் திரிதியை |
| 4 | 16 | வெ | சது16-13 | ரோ27-35 | ம27-35சி | மாசசதுர்த்திவிரதம் |
| 5 | 17 | சனி | பஞ்17-8 | மிரு30-28 | சித்60 | சஷ்டி, கதிராுக்க |
| 6 | 18 | ஞா | சஷ்19-53 | திரு35-20 | சித்60 | கரிநாள், கங்கோற்பத்தி |
| 7 | 19 | திங் | சப்24-30 | புன41-38 | அ41-38சி | சீமந்தம், காதுகுத்த |
| 8 | 20 | செவ் | அ30-20 | பூசம்49-5 | சித்60 | அசோகாஷ்டமி |
| 9 | 21 | புத | நவ36-43 | ஆயி56-45 | சித்60 | ஸ்ரீராமநவமீ, ஸ்ரீராமஜெ |
| 10 | 22 | வியா | தச43-8 | மக60 | அமி60 | தர்மராஜ தசமி [யந்தி |
| 11 | 23 | வெ | ஏ48-43 | மகம்4-20 | ம4-20சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 12 | 24 | சனி | து53-23 | பூரம்11-8 | சி11-8ம | வாமன தமன துவாதசி |
| 13 | 25 | ஞா | திர56-50 | உத்16-50 | அமி60 | பிரதோஷம். |
| 14 | 26 | திங் | சது58-50 | அஸ்21-13 | சி21-13பி | வியாதியஸ்தர் குளிக்க |
| 15 | 27 | செவ் | ○59-43 | சித்24-20 | சித்60 | கரிநாள், சித்ரா பௌர் |
| 16 | 28 | புத | பிர59-8 | சுவா26-10 | சித்60 | சைத்திரபகுளம் [ணமி |
| 17 | 29 | வியா | து57-43 | விசா26-58 | சித்60 | கதிராுக்க [ய்ய |
| 18 | 30 | வெ | திரி55-20 | அனு26-48 | சி26-48ம | பிஷேகம், பும்சவனம்செ |
| 19 | 1 | சனி | சது52-15 | கேட்25-53 | சித்60 | |
| 20 | 2 | ஞா | பஞ்48-37 | மூலம்24-20 | அ24-20சி | |
| 21 | 3 | திங் | சஷ்44-25 | பூரா22-8 | மர60 | |
| 22 | 4 | செவ் | சப்39-40 | உத்19-28 | அ19-28சி | |
| 23 | 5 | புத | அ34-33 | திரு16-23 | சி16-23பி | |
| 24 | 6 | வியா | நவ28-55 | அவி12-48 | சி12-48ம | |
| 25 | 7 | வெ | தச23-3 | சதை8-55 | சித்60 | |
| 26 | 8 | சனி | ஏகா17-3 | பூரட்4-53 | ம4-53சி | |
| 27 | 9 | ஞா | து11-10 | உத்0-48 ரேவ57-5 | அமி60 | |
| 28 | 10 | திங் | திர5-33 | அஸ்53-53 | சித்60 | மாசசிவராத்திரி |
| 29 | 11 | செ | சது0-40 ●56-33 | பர51-45 | சித்60 | அமாவாசம், சர்வத்திர அமாவாசை |
| 30 | 12 | புத | பிர54-3 | ✕50-45 | அ50-45சி | கிருத்திகை விரதம் |
| 31 | 13 | வியா | துதி52-50 | ரோ51-15 | மர60 | சந்திர தெரிசனம் 4-ம் பிறைபோல் தோற்றும் |

1926ஹு மேமீ

| | | | |
|---|---|---|---|
| புத | சூரி | | ரா |
| சுக் | 10உ கும்-குரு<br>12,, கும்-செ<br>17,, மீன-சுக்<br>26,, மே-புத | | |
| குரு செ | | | |
| கே | சனி | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.